# அண்ணல் நபியின் ﷺ அழகிய வாழ்க்கை

صلى الله عليه وسلم

75 வண்ணப் படங்களுடன்




மௌலவி, அப்ஸலுல் உலமா

**A.S. ஜுபைர் அஹ்மத்**
**ஷுஹ்தீ ஷாஹ் பைஜி பாகவி**

முதல்வர், ஜாமிஆ பைஜுல் ஹஸனாத்
அரபிக் கல்லூரி, பொரவச்சேரி



**வெளியீடு**

**காதிரிய்யா பதிப்பகம்**

**பொரவச்சேரி, நாகப்பட்டினம்**

**98942 90089, 86828 48807**

## நூல் விபரம்

| | |
|---|---|
| முதல் பதிப்பு | : துல்ஹஜ் 1440, 28.8.2019 |
| இரண்டாம் பதிப்பு | : ரபீவுல் அவ்வல் 1440, 26.11.2019 |
| விலை | : 200 ரூபாய் |


## சமர்ப்பணம்

1. எங்கள் ஷைகு நாயகம் அபுல் பயான் தில் நவாஜ்

**பைஜி ஷாஹ் நூரி** ரலியல்லாஹு அன்ஹு, லால்பேட்டை

2. என்னரும் தந்தையார் மௌலவி

**ஷேக் அப்துல் காதிர் இர்பானி ஷாஹ் நூரி மன்பஈ** – சேலம்


**நூல் கிடைக்குமிடங்கள் :**

1. **காதிரிய்யா பதிப்பகம்** பொரவச்சேரி, நாகப்பட்டினம்
   98942 90089, 86828 48807
2. **ஜாமிஆ இர்பானிய்யா அரபிக் கல்லூரி**
   37, ஆஜாத் நகர், சூரமங்கலம், சேலம்
   91502 52202
3. **பஷாரத் பதிப்பகம்** சென்னை
   044 - 2522 5028, 94442 40535
4. **ஸலாமத் பதிப்பகம்** சென்னை
   044 - 42167320, 98416 32449

**நூல் வடிவமைப்பு :**

மௌலவி A. **முஹம்மது நிஜாமி பிலாலி** B.com., M.A.,

தி டிசைனர் அபூ ஹஸீனா, சேலம்

9003242269, 80729 40613

# முன்னுரை

அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன். அல்லாஹும்ம ஸல்லி அலா ஸய்யிதினா முஹம்மதின் வஆலிஹீ வஸஹ்பிஹீ வஸல்லம்.

கண்மணி நாயகம் (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு ஆயிரக்கணக்கான மொழிகளில் லட்சக்கணக்கான முறை எழுதப்பட்டுவிட்டது. கியாமத் நாள் வரை எழுதப்பட்டுக் கொண்டே தான் இருக்கும்.

அப்படி எழுதிய நாயகத்தின் காதலர்கள் பட்டியலில் இந்த தகுதியற்றவனின் பெயரும் இடம் பெற வேண்டும் என்ற ஆசை இருந்தது அதை அல்லாஹ் தன் கருணையால் பூர்த்தி செய்தான்.

சிறுவர்களும், மாணவர்களும், பெண்களும், சாதாரண பாமர மக்களும் விளங்கும் எளிய வார்த்தைகளில் இந்நூல் தொகுக்கப்பட்டுள்ளது. இந்நூல் வெளிவர உதவிய அனைத்து அன்பர்களுக்கும் நன்றியுடன் துஆச் செய்கிறேன்.

அல்லாஹ் இந்த சிறு பணியை கபூல் செய்து கியாமத் வரை மக்களுக்கு பலன் தரக் கூடியதாக ஆக்குவானாக! ஆமீன்

**இப்படிக்கு**

மௌலவி, அப்ஸலுல் உலமா

**A.S. ஜுபைர் அஹ்மத்**

**ஷுஹுதீ ஷாஹ் பைஜி பாகவி**

முதல்வர், ஜாமிஆ பைஜுல் ஹஸனாத்

அரபிக் கல்லூரி, பொரவச்சேரி

## அண்ணல் நபியின் அழகிய வாழ்க்கை

## (பொருளடக்கம்)

### பகுதி - 1 அல்லாஹ்வும், நபிமார்களும்



### பகுதி - 2 அறியாமைக் காலம்

## பகுதி - 3 நபிகளாரின் பிறப்பும், இளமைப் பருவமும்



## பகுதி - 4 நுபுவ்வத்தும் அழைப்புப் பணியும்

## பகுதி - 5 நபி (ஸல்) அவர்களின் மதீனா வாழ்க்கை



## பகுதி - 6 ஹுதைபிய்யா உடன்படிக்கை

## பகுதி - 7 மக்கா வெற்றியும் இறுதி ஹஜ்ஜும்



## பகுதி - 8 குடும்பமும், பண்புகளும்

# பகுதி – I

# அல்லாஹ்வும், நபிமார்களும்

## 1. அல்லாஹ் (ஜல்ல ஜலாலுஹு)

அல்லாஹுத்தஆலாவைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையாக எதுவும் இல்லை. அனைத்து அதிகாரங்களும் அவனுக்கே சொந்தம். அனைத்துப் புகழும் அவனுக்கே சொந்தம். அவனே உயிர் கொடுக்கிறான். அவனே மரணிக்கச் செய்கிறான். அவனே நிரந்தரமான ஜீவனுள்ளவன். அவனுக்கு மரணமில்லை. நன்மைகள் அனைத்தும் அவன் கையில் தான் உள்ளன. அனைத்து வஸ்துக்களின் மீதும் பேராற்றல் உடையவன்.

அவன் தனியாக இருந்தான். அவனே இந்த உலகம் அனைத்தையும் படைத்தான். மலக்குகள், ஜின்களைப் படைத்தான். மனிதர்களை படைத்து அவர்கள் இந்த உலகில் வாழ வழிவகைகள் செய்து கொடுத்தான். மனிதர்களை சீர்திருத்த நபிமார்களை தனது தூதர்களாக ஆக்கி நேர்வழி காட்டினான். வேதங்களை இறக்கி அருள் புரிந்தான். மார்க்க சட்ட திட்டங்களை ஏற்படுத்தினான்.

அவனே மீண்டும் இவ்வுலகத்தை அழிப்பான். அதன் பின் மீண்டும் அனைத்தையும் உயிர் கொடுத்து

எழுப்புவான். மனிதர்களை விசாரணை செய்வான். நல்லவர்களை சொர்க்கத்திற்கு அனுப்புவான். தீயவர்களை நரகத்திற்கு அனுப்புவான்.

நன்மையும், தீமையும் அவன் நாட்டப்படியே நடக்கின்றன. அவன் நாடாது எதுவும் நடக்காது. அந்த அல்லாஹ்வின் அருளையும், திருப்தியையும் முழுமையாக பெற்று வாழ்ந்து அவன் பொருத்தம் பெற்று மரணமாகி, சுவனம் செல்ல அல்லாஹ் நம் அனைவருக்கும் கருணை காட்டுவானாக.

## 2. உலகின் தோற்றம்

அல்லாஹ் தன்னுடைய தன்மைகளை வெளிப்படுத்திப் பார்க்க ஆசைப்பட்டான். அதனால் இந்த உலகத்தை படைத்தான். இந்த உலகமும் இதிலுள்ள பொருட்கள் அனைத்தும் அல்லாஹ்வுடைய அறிவு ஞானத்தில் தோற்றங்களாக இருந்தன.

அவற்றில் எதையெல்லாம் அல்லாஹ் வெளிப்படுத்த நாடினானோ அவற்றைப் பார்த்து '**குன்**' நீ உண்டாகு என்று உத்தரவிட்டான். உடனே அவை வெளியில் காட்சி அளித்தன.

வானம், பூமி, சூரியன், சந்திரன், கோள்கள், கடல்கள், மலைகள், தாவரங்கள், விலங்கினங்கள் என அனைத்தையும் உண்டாக்கினான். அதன் பின் நெருப்பிலிருந்து ஜின் இனத்தையும், ஒளியிலிருந்து மலக்குகளையும் படைத்தான்.

இறுதியாக அல்லாஹ் மனிதனைப் படைத்தான். பூமியிலிருந்து அல்லாஹ் மண்ணை எடுத்து அதை தண்ணீரிலே குழைத்து அறுபது அடி நீளமுள்ள உருவமாக அல்லாஹ் அமைத்தான். பின் அதிலே ரூஹை ஊதி மனிதனாக ஆக்கினான். அவர்களே **ஆதம்** (அலைஹிஸ் ஸலாம்) ஆவார்கள்.

உயிர் ஊதிய பின் ஆதம் (அலை) அவர்களுக்கு மரியாதை செய்யும் விதமாக ஸஜ்தா செய்யும் படி மலக்குகளுக்கு உத்தரவிட்டான். எல்லா மலக்குகளும் ஸஜ்தா செய்தார்கள். **இப்லீஸ்** மட்டும் ஸஜ்தா செய்யவில்லை? இப்லீஸ் உண்மையில் ஜின் இனத்தைச் சேர்ந்தவன். அப்போது மலக்குகளுடன் இருந்தான். அல்லாஹ் இப்லீஸிடத்தில் நீ ஏன் ஆதம் (அலை ) அவர்களுக்கு ஸஜ்தா செய்யவில்லை என்று கேட்டதற்கு “என்னை நெருப்பால் படைத்தாய் அவரை மண்ணால் படைத்தாய். எனவே நான் தான் உயர்ந்தவன்” எனறு இப்லீஸ் பதில் கூறினான்.

இவ்வாறு அல்லாஹ்வின் பேச்சை மறுத்து பெருமை யடித்த காரணத்தால் அல்லாஹ் அவனை சபித்து விண்ணுலகிலிருந்து பூமிக்கு தூக்கி எறிந்தான்.

அப்போது இப்லீஸ் அல்லாஹ்விடம் தனக்கு கியாமத் வரை நீண்ட வயது வேண்டும் என்று கேட்டான். அல்லாஹ் உலக முடிவு நாள் வரை அவனுக்கு நீண்ட வயதைக் கொடுத்தான். அப்போது இப்லீஸ் அல்லாஹ்விடம் “நான் மக்களை நல்ல வழியில் செல்ல விடாது தடுப்பேன்” என்று கூறினான். அதற்கு அல்லாஹ் “உன்னையும் உன்னைப் பின்பற்றியவர்களையும் நரகில் தள்ளுவேன்” என்று பதிலளித்தான்.

பின்னர் ஆதம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களை அல்லாஹ் சுவனத்தில் வாழச் செய்தான். அவர்களின் விலா எலும்பிலிருந்து அவர்களின் மனைவியான ஹவ்வா (அலை) அவர்களை உண்டாக்கினான். இருவரும் சுவனத்தில் மகிழ்ச்சியாக இருந்தனர். சுவனத்தில் “எல்லா மரங்களின் பழங்களையும் உண்ணுங்கள். ஆனால் இந்த ஒரு மரத்தின் பழத்தை மட்டும் சாப்பிடாதீர்கள்” என்று அல்லாஹ் கூறினான்.

ஆதம் நபியின் மீது பொறாமைக் கொண்டிருந்த

இப்லீஸ், ஆதம் நபியிடம் வந்து, "இந்த மரத்தின் பழத்தை சாப்பிட்டால் நீங்கள் மலக்காகிவிடுவீர்கள். அல்லது சுவனத்திலேயே தங்கிவிடுவீர்கள். அதனால் தான் அல்லாஹ் தடுத்தான்" என்று அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து கூறினான்.

ஆதம் (அலை) அல்லாஹ்வின் கட்டளையை மறந்து அந்த மரத்தின் பழத்தை சாப்பிட்டார்கள். அதனால் அல்லாஹ் அவர்களை பூமிக்கு அனுப்பிவிட்டான். பின்பு அல்லாஹ்விடம் அவர்கள் மன்னிப்பு கேட்கவே அல்லாஹ் அவர்களை மன்னித்து தனது நபியாகவும் ஆக்கினான். ஆதம் (அலை) ஹவ்வா (அலை) அவர்களுக்கு நிறைய பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்கள் மூலமாக மனித இனம் பூமியில் பெருகியது. **(படம் - 1,2)**

## 3. நூஹ் (அலை)

ஆதம் (அலை) அவர்களுக்குப் பின் மனிதர்கள் ஒரே இறைவனாகிய அல்லாஹ்வையே வணங்கி வழிபட்டு வந்தார்கள். பல நூற்றாண்டுகளுக்குப் பின் மனிதர்களிடம் சிலை வைத்து வணங்கும் பழக்கம் ஏற்பட்டது. தங்கள் பெரியோர்கள் நல்லோர்களின் மரணத்திற்குப் பின் அவர்களின் உருவங்களை ஞாபகத்திற்காக சிலைகளாக செய்து வைத்தார்கள். பின்னர் அவர்களுக்கு கண்ணியமும் மரியாதையும் கொடுத்தார்கள். நாளடைவில் அது சிலை வணக்கமாக மாறிப்போனது.

அப்போது அல்லாஹ் அவர்களை நேர்வழிப்படுத்து -வதற்காக நூஹ் (அலை) அவர்களை நபியாக்கினான். அவர்கள் 950 வருடங்கள் மக்களிடம் அல்லாஹ்வைப் பற்றி எடுத்துச் சொன்னார்கள். எனினும் சில நபர்கள் மட்டுமே ஈமான் கொண்டார்கள். எனவே அல்லாஹுத் தஆலா அவர்கள் மீது பெரும் வெள்ளத்தை அனுப்பினான். நூஹ் நபி (அலை) அவர்களையும் அவர்களோடு ஈமான் கொண்ட

சிலரையும் மட்டும் கப்பல் மூலம் காப்பாற்றினான். மற்ற இணை வைப்பவர்கள் அனைவரும் அழிந்து போயினர்.(படம் - 3)

இவ்வாறு அல்லாஹ் தன்னை மறுத்தவர்களை தண்டித்தான். அதன் பின் அல்லாஹ் ஒவ்வொரு சமூகத்திலும் வரிசையாக நபிமார்களை அனுப்பி வைத்தான்.(படம் - 4,5)

## 4. இப்ராஹீம் (அலை)

நபி இப்ராஹீம் (அலை) அவர்களும் அல்லாஹ்வின் நபியாக இருந்தார்கள். அவர்கள் காலத்திலும் மக்கள் நிறைய சிலைகளை செய்து வைத்து அதை வணங்கி வந்தார்கள். அந்த சிலைகள் எந்த நன்மையும், தீமையும் செய்யாது. அதனால் எந்த பலனும் இல்லை. அவைகள் உங்களைக் காப்பாற்றாது. மேலும் தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ளவும் சக்தி இல்லாதவை என்று கூறினார்கள். மக்கள் அதை ஏற்கவில்லை.

ஒருநாள் மக்கள் அனைவரும் திருவிழாவுக்காக வெளியே சென்ற சமயத்தில் அவர்கள் வணங்கி வந்த எல்லா சிலைகளையும் உடைத்துவிட்டார்கள். ஒரே ஒரு பெரிய சிலையை மட்டும் விட்டுவிட்டார்கள். திரும்பி வந்து மக்கள் கேட்ட போது "அதோ அந்த பெரிய சிலையிடம் கேளுங்கள்." என்று கூறினார்கள். "அது பேசாதே" என்று மக்கள் கூறவே நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் "எதுவும் பேசாத தன்னையும் மற்றவர்களையும் பாதுகாக்கத் தெரியாத இந்த சிலைகளை ஏன் வணங்குகிறீர்கள்?" என்று கேட்டனர். ஆனாலும் விளங்காத அந்த மக்களும் அவர்களின் அரசனான நம்ரூதும் கோபம் கொண்டு நபி இப்ராஹீம் (அலை) அவர்களை மிகப் பெரிய நெருப்பு மூட்டி அதில் தூக்கி எறிந்தார்கள். அல்லாஹ் அந்த நெருப்பை பூஞ்சோலையாக மாற்றினான்.

அதன்பின் அவர்கள் இராக்கிலிருந்து ஷாம் நாட்டிற்குச் சென்றார்கள். அவர்களுக்கு **சாரா** (அலை) **ஹாஜர்** (அலை)

என்ற இரண்டு மனைவிகள் இருந்தனர்.

ஹாஜர் (அலை) மூலம் **இஸ்மாயீல்** (அலை) அவர்களும் சாரா (அலை) மூலம் **இஸ்ஹாக்** (அலை) அவர்களும் பிறந்தார்கள்.

அல்லாஹ்வின் உத்தரவுப்படி ஹஜ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்கள் தங்கள் மனைவி ஹாஜர் (அலை) அவர்களையும் கைக்குழந்தையான இஸ்மாயீல் (அலை) அவர்களையும் அழைத்துக் கொண்டு அரபியப் பாலைவனத்தில் மக்கா எனும் ஊரில் தனியாக விட்டுவிட்டு வந்து விட்டார்கள். அங்கே அல்லாஹ் அவர்களுக்கு ஜம்ஜம் தண்ணீரைக் கொடுத்தான். அதன்பின் மக்காவில் மக்கள் குடியேறத் தொடங்கினார்கள்.

இப்ராஹீம் (அலை) தனது மகன் இஸ்மாயீல் (அலை) அவர்களை அறுப்பது போல் கனவு கண்டு, அது இறைவனின் கட்டளை என்பதால் தனது மகனை அறுக்க முன் வந்தார்கள். அல்லாஹ் அவர்களை காப்பாற்றி அதற்கு பகரமாக ஆட்டை அறுக்கக் கொடுத்தான். **(படம் - 8)**

இப்ராஹீம் (அலை) அவர்களும், இஸ்மாயீல் (அலை) அவர்களும் சேர்ந்து மக்காவில் **கஃபா** எனும் இறையில்லத்தை கட்டினார்கள்.**(படம் - 6,7)**

இப்ராஹீம் (அலை) அவர்களின் மகனார் இஸ்ஹாக் (அலை) அவர்களும் நபியாக இருந்தார்கள். அவர்களின் மகன் **யஃகூப்** (அலை) அவர்களும் அவர்களின் மகன் **யூசுப்** (அலை) அவர்களும் நபிமார்களாக இருந்தார்கள். யஃகூப் (அலை) அவர்களுக்கு “இஸ்ராயீல்” என்றும் பெயர் உண்டு. எனவே அவர்களின் வாரிசுகளுக்கு “**பனூ இஸ்ராயீல்**” (இஸ்ரவேலர்கள்) என்று கூறப்படும்.

## 5. ஹஜ்ரத் மூஸா (அலை)

மிஸ்ர் நாட்டில் பிறந்த மூஸா (அலை) அவர்களும்

அல்லாஹ்வின் திருநபியாக இருந்தார்கள். அப்போது அரசனாக இருந்த "பிர்அவ்ன்" என்பவன் மூஸா (அலை) அவர்களையும் அவர்களை பின்பற்றிய முஸ்லிம்களையும் மிகவும் கொடுமைபடுத்தினான். இறுதியில் அல்லாஹ் பிர்அவ்னையும் அவன் கூட்டத்தார்களையும் செங்கடலில் மூழ்கடித்து அழித்தொழித்தான். மூஸா (அலை) அவர்களுக்கு அல்லாஹ் தவ்ராத் வேதத்தை கொடுத்தான். அவர்களுடன் அல்லாஹ் நேரடியாகப் பேசினான். எனவே அவர்களுக்கு "**கலீமுல்லாஹ்**" அல்லாஹ்வுடன் பேசியவர் என்று பெயர் சொல்லப்பட்டது. மூஸா (அலை) அவர்களைப் பின்பற்றியவர்கள் யஹூதிகள், யூதர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். **(படம் - 9)**

## 6. ஹஜ்ரத் ஈஸா (அலை)

அல்லாஹ்வின் உத்தரவைக் கொண்டு தந்தையில்லாமல் மர்யம் (அலை) அவர்களின் மகனாக ஈஸா (அலை) பிறந்தார்கள். அவர்கள் பனூ இஸ்ராயீல்களுக்கு நபியாக அனுப்பப்பட்டார்கள். இவர்களுக்கு "**இன்ஜீல்**" எனும் இறைவேதம் அருளப்பட்டது.

இவர்களை ஏற்றுக் கொள்ளாத மக்கள் இவர்களை கொலை செய்ய முயற்சி செய்த போது அல்லாஹ் இவர்களை 4-வது வானத்திற்கு அழைத்துக் கொண்டான். ஈஸா நபி (அலை) அவர்களின் உருவத்தை எதிரிகளில் ஒருவனுக்கு கொடுக்கப்பட்டது. எனவே அவனை சிலுவையில் அடித்து கொன்று விட்டார்கள். பின்னர் ஈஸா (அலை) அவர்களையே கொன்று விட்டதாக மக்களுக்கு மத்தியில் பரப்பி விட்டார்கள்.

ஈஸா (அலை) அவர்களைப் பின்பற்றியவர்களுக்கு "நசாரா" நசரானிகள் - **கிறிஸ்துவர்கள்** என்று சொல்லப்படும். இவர்கள் ஈஸா (அலை) அல்லாஹ்வின் மகன் என்றும் அவர்கள் கொல்லப்பட்டார்கள் என்றும் கூறி

வருகிறார்கள். இரண்டுமே தவறான கருத்தாகும்.

இவ்வாறாக உலக மக்களுக்கு நேர்வழி காட்டுவதற்காக ஒரு லட்சத்து இருபத்தி நான்காயிரம் நபிமார்களை அல்லாஹ் அனுப்பி வைத்தான். அவர்களில் இறுதி நபியாக, உலகம் அனைத்திற்கும் கியாமத்து நாள் வரை ஒரே நபியாக முஹம்மது (ஸல்) அவர்களை அனுப்பி வைத்தான்.

## குர்ஆனில் கூறப்பட்ட 25 நபிமார்கள் பட்டியல்

| நபிமார்களின் பெயர்கள் | | வாழ்ந்த காலம் | வாழ்ந்த இடம் | வயது |
|---|---|---|---|---|
| **ஆதம் (அலை)** | ADAM (AS) | கி.மு. 5872 - 4942 | இந்தியா | **950** |
| **இத்ரீஸ் (அலை)** | ENOCH (AS) | கி.மு. 4533 - 4188 | ஈராக் | **83** |
| **நூஹ் (அலை)** | NOAH (AS) | கி.மு. 3993 - 3043 | ஈராக் | **950** |
| **ஹூத் (அலை)** | HUD (AS) | கி.மு. 2450 - 2320 | அஹ்காப் | **150** |
| **ஸாலிஹ் (அலை)** | SALEH (AS) | கி.மு. 2150 - 2080 | ஹிஜ்ர் | **58** |
| **இப்ராஹீம் (அலை)** | ABRAHAM (AS) | கி.மு. 1997 - 1822 | ஈராக் | **175** |
| **லூத் (அலை)** | LOT (AS) | கி.மு. 1950 - 1870 | சதூம் | **175** |
| **இஸ்மாயீல் (அலை)** | ISHMAEL (AS) | கி.மு. 1911 - 1774 | மக்கா | **120** |
| **இஸ்ஹாக் (அலை)** | ISAAC (AS) | கி.மு. 1897 - 1717 | பலஸ்தீன் | **180** |
| **யஃகூப் (அலை)** | JACOB (AS) | கி.மு. 1837 - 1690 | ஷாம் | **147** |
| **யூசுப் (அலை)** | JOSEPH (AS) | கி.மு. 1745 - 1635 | மிஸ்ர் | **110** |
| **ஷுஐப் (அலை)** | JETHRO (AS) | கி.மு. 1600 - 1490 | மத்யன் | - |
| **அய்யூப் (அலை)** | JOB (AS) | கி.மு. 1540 - 1420 | ஷாம் | **92** |

| நபிமார்களின் பெயர்கள் | | வாழ்ந்த காலம் | வாழ்ந்த இடம் | வயது |
|---|---|---|---|---|
| துல்கிப்ல் (அலை) | EZEKIEL (AS) | கி.மு. 1500 - 1425 | திமிஷ்க் | 75 |
| மூஸா (அலை) | MOSES (AS) | கி.மு. 1527 - 1408 | மிஸ்ர் | 120 |
| ஹாரூன் (அலை) | AARON (AS) | கி.மு. 1531 - 1408 | மிஸ்ர் | 122 |
| தாவூத் (அலை) | DAVID (AS) | கி.மு. 1041 - 981 | பலஸ்தீன் | 70 |
| சுலைமான் (அலை) | SOLOMAN (AS) | கி.மு. 989 - 931 | பலஸ்தீன் | 53 |
| இல்யாஸ் (அலை) | ELIJAH (AS) | கி.மு. 910 - 850 | பஃலபக் | - |
| அல்யஸவு (அலை) | ELISHA (AS) | கி.மு. 885 - 795 | திமிஷ்க் | - |
| யூனுஸ் (அலை) | JONAH (AS) | கி.மு. 820 - 750 | நைனுவா | - |
| ஜகரிய்யா (அலை) | ZACHARIAH (AS) | கி.மு. 91 - கி.பி 31 | பலஸ்தீன் | 120 |
| யஹ்யா (அலை) | JOHN (AS) | கி.மு. 1 - கி.பி. 31 | பலஸ்தீன் | 30 |
| ஈஸா (அலை) | JESUS (AS) | 0 - கி.பி. 32 | பலஸ்தீன் | 33 |
| முஹம்மத் (ஸல்) | MUHAMMED (SAL) | கி.பி. 571 - கி.பி. 632 | மக்கா மதீனா | 63 |

பகுதி – 2

# அறியாமைக் காலம்

## 1. அறியாமைக் காலம்

ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்கள் நபியாக அனுப்பப்பட்ட பின்பு சுமார் 500 வருடங்கள் உலகில் எந்த நபியும் அனுப்பப்படவில்லை.

நபிமார்கள் வராமல் நீண்ட இடைவெளி ஏற்பட்டதால் உலகெங்கும் அறியாமை என்னும் இருள் சூழ்ந்து கொண்டது. நேர்வழி என்னும் ஒளி மங்கி விட்டது. மேலும் நபிமார்களும், ரசூல்மார்களும் தங்களுடைய காலங்களில் எடுத்துச் சொன்ன உண்மையான தவ்ஹீதும், தூய்மையான மார்க்கமும் மறைந்து விட்டது.

இதன் காரணமாக புதிய புதிய வழிகேடர்களும், குழப்பவாதிகளும் தோன்றி மக்களை தீயவழியில் நடத்திக் கொண்டிருந்தார்கள்.

## 2. அக்காலத்து மத வழிபாடுகள்

**யஹூதிகள்(யூதர்கள்)**

இவர்கள் ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்களை பின்பற்றியவர்கள் ஆவார்கள். இவர்களுக்கு அருளப்பட்ட வேதம் “தவ்ராத்” ஆகும்.

மூஸா (அலை) அவர்களுக்குப் பின்னால் இவர்கள் தவ்ராத்தில் நிறைய மாற்றங்களை ஏற்படுத்தி விட்டார்கள். அவர்கள் மார்க்கப்படி நடக்காது, அவர்களின் தலைவர்களும், பாதிரியார்களும், அவர்கள் இஷ்டப்படி மத சட்டங்களை மாற்றி விட்டார்கள்.

ஈஸா (அலை) அவர்கள் நபியாக வந்த போது அவர்களை ஏற்க மறுத்து கொலை செய்ய முயன்றார்கள். எனவே அல்லாஹ் அவர்களை தன் பக்கம் வானத்திற்கு உயர்த்திக் கொண்டான். அதற்கு பின்பும் ஈஸா (அலை) அவர்களை பின்பற்றிய கிறிஸ்துவர்களும், யூதர்களும் சண்டையிட்டுக் கொண்டார்கள்.

**கிறிஸ்துவர்கள்(நசாரா):-**

இவர்கள் நபி ஈஸா (அலை) அவர்களை பின்பற்றக் கூடியவர்கள். இவர்களுக்கு இறக்கப்பட்ட வேதம் “இன்ஜீல்”

ஈஸா (அலை) அவர்களுக்குப் பின்னர் தங்கள் வேதத்தில் நிறைய மாற்றங்களை செய்து கொண்டனர். மேலும் சிலை வணக்கத்தை ஆரம்பித்துக் கொண்டனர். துறவிகளையும், பாதிரிகளையும் இறைவனாக ஆக்கிக் கொண்டனர்.

இந்த நஸ்ரானிகள் இன்னும் யஹூதிகள் இருவருமே (பனூ இஸ்ராயீல்) இஸ்ராயீலுடைய பிள்ளைகள் என்று அழைக்கப்படுவார்கள். “**இஸ்ராயீல்**” என்பது “யஃகூப் (அலை)” அவர்களுடைய பெயராகும்.

இவர்களை “அஹ்லே கிதாப்” (வேதக்காரர்கள்) என்றும் அழைக்கப்படும். நபி (ஸல்) அவர்கள் பிறக்கும் காலத்தில் ரோம் மற்றும் சிரியா போன்ற நாடுகளை கிறிஸ்துவர்கள் ஆட்சி செய்து வந்தார்கள்.

**மஜூஸிகள்:-**

மஜூஸிகள் என்றால் “நெருப்பை வணங்கக்கூடிய

-வர்கள்" என்று பொருள். இவர்கள் தங்கள் கோவில்களில் அணையா நெருப்பை மூட்டி வைத்து வணங்கினார்கள்.

ஈரான், ஈராக் முதலிய பாரசீக நாட்டை இவர்கள் ஆட்சி செய்தார்கள். பார்ஸி மொழியிலே பேசினார்கள். இவர்களுக்கு மதசட்டங்கள் என்று எதுவுமில்லை.

எனவே மனம் போன போக்கில் வாழ்ந்து வந்தார்கள்.

**சிலைவணங்குபவர்கள்:-**

இவர்கள் கல்லாலும், உலோகத்தாலும், மரத்தாலும் சிலைகளை செய்து அவற்றை வணங்கி வந்தார்கள். இவர்கள் வணங்கும் கடவுளின் எண்ணிக்கை இலட்ச்தையே தாண்டிவிடும். இதுமட்டுமின்றி சூரியன். சந்திரன், மனிதர்கள், மாடு, குரங்கு, பாம்பு, எலி, மரம், செடி அனைத்தையும் வணங்கி வந்தார்கள்.

மக்காவில் வாழ்ந்த குரைஷி காபிர்களும் பலநூறு சிலைகளை செய்து வணங்கி வந்தார்கள்.

அல்லாஹ்வை வணங்குவதற்காக ஹஜ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்கள் கட்டிய கஃபதுல்லாவைச் சுற்றி 360 சிலைகள் வைத்து அவைகளுக்கு பூஜை செய்து வந்தார்கள்.

**புத்தமதம்:-**

இவர்கள் புத்தர் என்பவரின் அறிவுரைப்படி வாழ்பவர்கள். நாளடைவிலே புத்தருக்கு சிலை வைத்து வணங்க ஆரம்பித்து விட்டார்கள். எனவே இவர்களும் சிலைவணங்கும் காபிர்களாவார்கள்.

இவ்வாறு இன்னும் பல மதங்கள் மக்களுக்கிடையே பரவிக் கிடந்தது.

## 3. அறியாமைக்கால அரபு மக்கள்

மக்கா, மதீனா இன்னும் அதை சூழ்ந்து வாழ்ந்த அரபு

நாட்டில் வாழ்ந்த மக்கள் சிலைகளை வணங்கியது மட்டுமின்றி எல்லா விதமான சீர் கேடுகளும் செய்து வந்தார்கள்.

மது, சூதாட்டம், கொலை, கொள்ளை, சாதிவெறி, சாதிச் சண்டைகள், பெண்குழந்தைகளை உயிரோடு புதைக்குதல், மிருகங்களை துன்பம் செய்தல் போன்ற அனைத்து தீய காரியங்களும் அவர்களிடம் நிறைந்து இருந்தது. சிறிய சிறிய விஷயத்திற்கு எல்லாம் போர்கள் ஆரம்பித்து பல வருடங்கள் நடத்தி வந்தார்கள்.

ஆக ஒட்டு மொத்தமாக உலக மக்கள் அனைவரும் அல்லாஹ்வை மறந்து, அவனுடைய கட்டளைகள் அனைத்தையும் மறந்து, வாழவேண்டிய முறைகளை மறந்து தனது இஷ்டத்திற்கு வாழ்ந்து வந்தார்கள். அப்போது தான் அல்லாஹுத்தஆலா நபி (ஸல்) அவர்களை அரபு நாட்டில் பிறக்கச் செய்தான்.

## 4. மக்காவும், குரைஷிகளும்

அரபு நாடு மூன்று பக்கம் கடலாலும், ஒரு பக்கம் நிலத்தாலும் சூழப்பட்டது.

வடக்கே ஷாம் மற்றும் ஈராக் நாடுகளும், தெற்கே அரபிக்கடலும், கிழக்கே பாரசீக வளைகுடாவும், மேற்கே செங்கடலும் இதன் எல்லைகளாகும். இது சுமார் 13இலட்ச சதுர கி.மீ பரப்பளவு உடையது. **(படம் - 11)**

அரபு நாடு முழுவதும் மலைகளும், மணல் குன்றுகளும் நிரம்பிய வறட்சியான பாலைவனப் பிரதேசங்களாகும். அங்குள்ள மக்கள் பேசிய மொழி அரபி மொழியாகும். எனவே இவர்கள் அரேபியர்கள் என்று அழைக்கப் பட்டார்கள்.

அரபு நாட்டின் முக்கிய நகரங்களில் மக்காவும் ஒன்று. அங்கு தான் உலகின் முதல் இறை இல்லமாகிய கஃபா

உள்ளது.

முதல் மனிதர் ஆதம் (அலை) அவர்களால் அந்த இறை இல்லம் கட்டப்பட்டது. அதன் பின்புஎல்லா நபிமார்களும் அங்கே வந்து தவாப் செய்தார்கள். அல்லாஹ்வைத் தொழுது வந்தார்கள்.

நபி இப்ராஹீம் (அலை) அவர்களும், அவர்களின் மகன் இஸ்மாயீல் (அலை) அவர்களும் சேர்ந்து கஃபாவை மீண்டும் புதுப்பித்துக் கட்டினார்கள்.

பின்பு அங்கிருந்து அல்லாஹ்விடம் துஆ செய்தார்கள். "யாஅல்லாஹ்! எங்களின் இந்த பணியை ஏற்றுக் கொள் -வாயாக"!

"எங்களையும், எங்களுடைய பிள்ளைகளையும் உனக்கு வழிபட்டவர்களாக ஆக்குவாயாக"!

"இன்னும் இந்த மக்களுக்கு உன்புறத்திலிருந்து ஒரு தூதரை அனுப்பி வைப்பாயாக!" என்று துஆ செய்தார்கள்.

அந்த துஆவை ஏற்றுக் கொண்டு அல்லாஹுத்தஆலா சுமார் 3500 வருடங்கள் கழித்து நபி (ஸல்) அவர்களை மக்காவில் நபியாக அனுப்பி வைத்தான்.

## 5. இப்ராஹீம் (அலை) அவர்களின் வம்சத்தினர்கள்

நபி இஸ்மாயீல் (அலை) அவர்களுக்கு 12 ஆண் பிள்ளைகள் இருந்தனர். அவர்களின் மகன் நாஃபித் என்பவர் வம்சத்தில் அத்னான் தோன்றினார். அத்னான் என்பவர் நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் 40வது தலைமுறைப் பேரர் ஆவார்.

அத்னானுடைய வம்சத்தில் **ரபீஆ, முழர்** என்ற இரண்டு சகோதரர்கள் இருந்தார்கள். இவர்கள் இரண்டு பேரின் வம்சமும் அரபுநாடு முழுவதும் பிரபல்யமாக இருந்தது.

இவர்களில் முழர் கோத்திரத்தில் "ஃபஹ்ர் இப்னு

மாலிக்” என்பவர் தோன்றினார். இவருக்கு “**குரைஷி**” என்று பெயர். எனவே இவர்களுடைய பிள்ளைகள் அனைவரும் “குரைஷிகள்” என்று அழைக்கப்பட்டார்கள்.

குரைஷி வம்சத்தில் தோன்றிய “**குசை**” என்பவர் மக்காவின் தலைவராகவும், கஃபாவின் நிர்வாகியாகவும் பொறுப்பேற்றார். அவருக்கு பின்பு அந்தப் பொறுப்பு அவர் மகன் அப்துல் முனாஃபிற்கும் அதன் பின்பு அவர் மகன் ஹாஷிமிற்கும் அதன் பின்பு அவர் மகன் அப்துல் முத்தலிப் புக்கும் வந்தது. அப்துல் முத்தலிப் தான் நபி (ஸல்) அவர்களின் பாட்டனார் ஆவார். அக்காலத்தில் அனைத்து அரபு நாட்டு மக்களுக்கும் குரைஷிகளே தலைவர்களாக இருந்தார்கள். அவர்கள் கஃபாவின் பொறுப்புதாரிகளாக இருந்ததால் மக்கள் அனைவரும் அவர்களை மதித்தார்கள்.

குரைஷிகள் வீரத்திலும், நற்குணத்திலும், மொழித் திறமையிலும், மேலானவர்களாகவே இருந்தார்கள். எனவே குரைஷி குலம் தான் மிக உயர்ந்த குலமாக மக்களால் மதிக்கப்பட்டது.

## 6. சிலை வணக்கம்

குரைஷியர்கள் தங்கள் முன்னோர்களான இப்ராஹீம் நபி, இஸ்மாயீல் நபி அவர்களின் வழியை பின்பற்றி உண்மை முஸ்லிம்களாக வாழ்ந்து வந்தார்கள். அல்லாஹ்வையும் அவனது ரஸூலையும் கியாமத் நாளையும் ஈமான் கொண்டு வாழ்ந்தார்கள்.

குரைஷிகளில் தோன்றிய அம்ர் இப்னு லுஹை என்பவன் ஷாம் நாட்டிற்கு சென்ற பொழுது அந்த மக்கள் சிலை வைத்து வணங்குவதைப் பார்த்தான்.

அங்கிருந்து ஒரு சிலையை வாங்கி வந்து கஃபாவின் நடுவில் வைத்து அதற்கு **ஹூபல்** என்று பெயர் வைத்தான். மக்களெல்லாம் அதை வணங்க ஆரம்பித்தார்கள்.

அதன் பின் எல்லா இடங்களிலும் சிலை வணக்கம் ஆரம்பமாகிவிட்டது. கஃபாவை சுற்றி 360 சிலைகள் வைக்கப்பட்டது.

இவ்வாறு ஊர் ஊருக்கு சிலைகளும் கோவில்களும் ஏற்படுத்தப்பட்டன.

ஒவ்வொருவரின் வீட்டிலும் சிலைகளை வைத்து வணங்க ஆரம்பித்தார்கள்.

## 7. யானைப்படை

அப்துல் முத்தலிப் மக்காவின் தலைவராக இருந்த போது கஃபாவை இடிப்பதற்காக **அப்ரஹா** என்ற மன்னன் யானைப் படையுடன் வந்தான்.

ஹபஷா நாட்டு மன்னராகிய நஜ்ஜாஷியால் எமன் நாட்டு ஆளுனராக அப்ரஹா நியமிக்கப்பட்டிருந்தான். அவன் கிறிஸ்தவ மதத்தை சார்ந்தவன். அவன் எமனில் உள்ள சன்ஆ எனுமிடத்தில் மிகப் பெரிய கிறிஸ்துவ கோயிலை கட்டினான். மக்காவில் உள்ள கஃபாவிற்கு செல்லாமல் அனைவரும் அங்கே வர வேண்டும் என்று உத்தரவிட்டான்.

ஆனால் யாரும் அங்கு செல்லவில்லை அதை மதிக்கவுமில்லை. ஒரு மனிதன் இரவு நேரத்தில் அந்த கோவிலுக்கு சென்று அசுத்தம் செய்து விட்டு வந்து விட்டான்.

அதனால் மிகவும் கோபம் கொண்ட அப்ரஹா கஃபதுல்லாவை இடிப்பதாக சத்தியம் செய்தான். அதன் பின் பெரும்படையை தயார் செய்து கொண்டு மக்காவிற்கு வந்தான்.

அவன் படையில் 13 யானைகள் இருந்தன. அவனது பெரும் படையைக் கண்ட மக்காசவாசிகள் அதை எதிர்த்து நிற்க தங்களுக்கு சக்தியில்லை என்று அறிந்து கொண்டார்கள்.

எனவே கஃபாவை அல்லாஹுத் தஆலாவிடம் ஒப்படைத்து விட்டு அருகிலுள்ள மலைகளிலே ஏறி ஒளிந்து கொண்டார்கள்.

அப்துல் முத்தலிப்புக்கு சொந்தமான 200 ஒட்டகங்கள் மக்காவுக்கு வெளியே மேய்ந்து கொண்டிருந்தன. அதை அப்ரஹாவின் ஆட்கள் பிடித்து கொண்டார்கள். இதையறிந்த அப்துல் முத்தலிப் அப்ரஹாவிடம் சென்று தனது ஒட்டகங்களை திருப்பி தருமாறு கேட்டார். அப்ரஹாவோ "நான் கஃபாவையே இடிக்க வந்துள்ளேன். அதைப் பற்றி என்னிடம் கேட்காமல் உங்கள் ஒட்டகங் களை பற்றி கேட்கின்றீர்களே?" என்று கேட்டான்.

அதற்கு அப்துல் முத்தலிப் "இந்த ஒட்டகங்களுக்கு நான் எஜமான் எனவே அவற்றை நான் பாதுகாப்பேன். என்றும் மேலும் கஃபாவின் எஜமான் அல்லாஹ் அதை அவன் பாதுகாப்பான்" என்றும் கூறிவிட்டு வந்து விட்டார்.

அப்துல் முத்தலிபும் அவருடன் ஓரிரு நபர்கள் மட்டும் கஃபாவின் கதவை பிடித்துக் கொண்டு அல்லாஹ்விடம் உதவி கேட்டு துஆச் செய்து கொண்டிருந்தார்கள்.

மற்றவர்களோ ஒளிந்து கொண்டு நடப்பவற்றை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அப்ரஹா தனது யானைப் படையை கஃபாவை நோக்கி ஏவினான். ஆனால் யானைகள் அப்படியே படுத்துக் கொண்டன. அவைகளை எத்தனை அடி அடித்த போதும் கொஞ்சம் கூட நகரவில்லை.

அப்போது அல்லாஹ் அவர்களை நோக்கி '**அபாபீல்**' எனும் சிறிய பறவைகளைக் கூட்டம் கூட்டமாக அனுப்பி வைத்தான்.

அந்தப் பறவைகள் தங்கள் கால்களிலும், தங்கள் வாய்களிலும் சிறிய, சிறிய கற்களை கொண்டு வந்து அந்த

*படைகளின் மீது எறிந்தன.*

*ஒரு பட்டாணி அளவிற்கே அந்த கற்கள் இருந்தது. அந்தக் கற்கள் யார் மீது விழுந்ததோ அவன் தலைகளும் உறுப்புகளும் துண்டிக்கப்பட்டு இறந்து போனான்.*

*இவ்வாறே அந்த படை சின்னாபின்னமாக ஆகிவிட்டது. ஒரு சிலர் அங்கிருந்து தப்பிச் சென்றார்கள். ஆனால் வழியிலேயே இறந்து போனார்கள். அப்ரஹாவும் அங்கிருந்து தப்பிச் சென்றான். ஆனால் வழியிலேயே ஒவ்வொரு விரலாக கழன்று விழுந்து அவனும் இறந்து போனான்.*

*இவ்வாறு அல்லாஹ் கஃபதுல்லாஹ்வை காப்பாற்றினான். அதன் பின்பு குறைஷிகளின் மதிப்பு மக்களிடத்தில் மேலும் அதிகமாகிவிட்டது.*

*கி.பி. 570ல் இந்த சம்பவம் நடைபெற்றது. இந்த வருடத்தில் தான் ரபீவுல் அவ்வல் பிறை 12ஆம் நாள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உலகில் பிறந்தார்கள்*

## பகுதி – 3

# நபிகளாரின் பிறப்பும் இளமைப் பருவமும்

## 1. நபி (ஸல்) அவர்களின் பிறப்பு

*குறைஷிகளின் தலைவராகிய அப்துல் முத்தலிபிற்கு 10 ஆண் பிள்ளைகளும், 6 பெண்பிள்ளைகளும் இருந்தார்கள். அவர்களில்* ***அப்துல்லாஹ்*** *என்ற மகனார் மிகவும் அழகிய தோற்றம் உள்ளவராகவும், நற்குணம் உள்ளவராகவும் அனைவரும் விரும்பும் ஒழுக்க சீலராகவும் இருந்தார்.*

*ஜஹ்ரா கிளையின் தலைவரான வஹப் என்பவரின் மகள்* ***ஆமினாவை*** *அப்துல்லாஹ்வுக்கு திருமணம் செய்து வைத்தார்கள்.*

*உயர்குலத்தில் பிறந்த, உயர்ந்த நற்குணமுடைய பெண்மணியாக அவர்கள் இருந்தார்கள்.*

*அப்துல்லாஹ், ஆமினாவின் மகனாக* ***முஹம்மது நபி*** *(ஸல்) அவர்கள் கி.பி 570 ரபியுல் அவ்வல் பிறை 12 திங்கட் கிழமை பிறந்தார்கள்.*

*நபி (ஸல்) அவர்கள் தாய் வயிற்றில் இருக்கும் பொழுது அவர்களின் தந்தை அப்துல்லாஹ் வியாபாரத்திற்காக மதீனா சென்றார்கள். அப்போது நோய்வாய்பட்டு அங்கேயே மரணமடைந்து, அங்கேயே அடக்கம் செய்யப் பட்டார்கள். நபி (ஸல்) உலகில் பிறக்கும் போதே தந்தையை*

இழந்த அநாதையாகவே பிறந்தார்கள். அவர்கள் பிறந்ததும் அப்துல் முத்தலிப் அவர்கள் “முஹம்மது” என்று பெயர் வைத்தார்கள்.

## 2. வளர்ப்புத் தாய்

அக்காலத்தில் நகர்புற மக்கள் தங்கள் குழந்தைகளை கிராமப்புற தாய்மார்களிடம் ஒப்படைத்து வளர்க்கச் செய்வார்கள். கிராமங்களில் இயற்கையான சூழ்நிலையும், சுத்தமான காற்றும், தண்ணீரும் கிடைக்கும். மேலும் அவர்கள் பேசும் மொழி தூய்மையான அரபியாக இருக்கும். நபி (ஸல்) அவர்களை வளர்க்கும் பாக்கியம் ‘தாயிப்’ என்ற ஊரைச் சார்ந்த **ஹலீமா சஅதியா** என்ற அன்னைக்கு கிடைத்தது.

நபி (ஸல்) அவர்கள் தந்தை இல்லாத அநாதை என்று தெரிந்து அவர்களால் எந்த உதவியும் கிடைக்காது என்று கருதி கிராமத்திலிருந்து வந்த மற்ற தாய்மார்கள் எல்லாம் இந்த குழந்தையை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார்கள்.

ஆனால் ஹலீமா அவர்கள் மட்டும் ஏற்றுக் கொண்டார்கள். அதன் பின் ஹலீமாவுடைய வாழ்க்கையில் மிகப் பெரிய பரக்கத் ஏற்பட்டு விட்டது.

பால் வற்றியிருந்த அவர்களின் மடியிலே பால் சுரந்தது. உணவின்றி இளைத்துப் போன ஒட்டகம், கழுதை, ஆடுகள் எல்லாம் தளதளவென வளர்ந்தன.

தண்ணீரின்றி வரண்டு கிடந்த பயிர்களும், மரங்களும் செழித்தன. இப்படிப்பட்ட பரக்கத்தான குழந்தையை விட்டுவிட்டோமே என்று மற்ற தாய்மார்கள் பொறாமைக் கொண்டார்கள்.

இரண்டு வருடங்களுக்குப் பிறகு குழந்தையை தாயிடம் கொண்டு வந்த ஹலீமா அவர்கள் பிரிய மனமில்லாமல் இன்னும் சிலகாலம் நானே வளர்க்கிறேன் என்றுக் கெஞ்சிக்

கேட்டார்கள்.

ஆமினா அவர்களும் அனுமதி கொடுத்து விட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் 4 வயது வரை அன்னை ஹலீமா வீட்டில் நல்ல முறையில் வளர்ந்து வந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் 4வது வயதில் மலக்குகளின் தலைவர் **ஜிப்ரயீல்** (அலை) அவர்கள் வந்து நபி (ஸல்) அவர்களை படுக்க வைத்து அவர்களின் நெஞ்சைப் பிளந்து இதயத்தை வெளியே எடுத்தார்கள்.

அதை ஜம்ஜம் தண்ணீரிலே கழுவி மீண்டும் உள்ளே வைத்து மூடிவிட்டார்கள். இந்த நிகழ்ச்சியை பார்த்து பயந்து போன ஹலீமா அவர்கள் நபியவர்களை ஆமீனா அம்மாவிடம் கொண்டு வந்து விட்டுவிட்டார்கள்.

ஆறு வயது வரை நபி (ஸல்) அவர்கள் அம்மாவிடம் வளர்ந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் ஆறாவது வயதில் அன்னை ஆமினா அவர்கள் தனது உறவினர்களை பார்ப்பதற்காக மதீனா வந்தார்கள். திரும்பி வரும் வழியில் 'அபுவா' என்னும் இடத்தில் வஃபாத்தாகி விட்டார்கள்.

அதன்பின் அப்துல் முத்தலிப் அவர்கள் தனது பொறுப்பில் நபி (ஸல்) அவர்களை வளர்த்து வந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் எட்டாவது வயதில் அருமைப் பாட்டனார் அவர்களும் வஃபாத்தாகி விட்டார்கள். எனவே அவர்களை வளர்க்கும் பொறுப்பை சிறிய தந்தை **அபூதாலிப்** அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

## 3. நபிகளாரின் இளமைப் பருவம்

நபி (ஸல்) அவர்கள் சிறுவயதில் இருந்தே மிகச் சிறந்த ஒழுக்கத்தோடு வளர்ந்து வந்தார்கள். அறியாமைக் காலத்தின் தீய பழக்கங்கள் எதையும் அவர்கள் பின்பற்றவில்லை.

தீய பேச்சுக்கள், தீய செயல்கள் ஒருபோதும் செய்ய மாட்டார்கள். உண்மைப் பேசுபவராகவும், அமானிதத்தை பேணுபவர்களாகவும் இருந்தார்கள்.

எனவே அவர்களை மக்கள் அனைவரும் '**ஸாதிக்**' உண்மையாளர் '**அமீன்**' நம்பிக்கையாளர் என்று அழைப்பார்கள்.

மிகவும் வெட்க சுபாவம் உள்ளவர்களாகவும் தனது உறவினர்களை மதிப்பவர்களாகவும் இருந்தார்கள். சிரமப்படும் மக்களுக்கு உதவி செய்வார்கள்.

விருந்தினர்களை கண்ணியப்படுத்துவார்கள். ஏழைகளை அன்போடு நடத்துவார்கள். நோயாளிகளை கவனித்துக் கொள்வார்கள்.

யாரையும் திட்டவோ, குறை சொல்லவோ மாட்டார்கள். தன் கைகளால் உழைத்தே உண்ணுவார்கள். அல்லாஹ் கொடுத்ததை பொருந்திக் கொள்வார்கள். பேராசைப்பட மாட்டார்கள்.

எல்லோரிடமும் அன்பாகவே பழகுவார்கள். யாருக்கும் சிரமம் தரவே மாட்டார்கள். இப்படி ஒரு பிள்ளை எனக்கு இல்லை என்று தாய்மார்கள் எல்லாம் ஏங்கினார்கள்.

நபி (ஸல்) அவர்களுக்கு 15 வயது ஆன போது குரைஷி களுக்கும், கைஸ் கூட்டத்தார்களுக்கும் ஒரு போர் நடைபெற்றது.

இதற்கு "**ஹர்புல்பிஜார்**" என்று பெயர். அந்த போரில் நபி (ஸல்) அவர்கள் தனது தந்தையின் சகோதரர்களோடு கலந்து கொண்டார்கள். அவர்களுக்கு அம்பை எடுத்து கொடுக்கும் பொறுப்பைச் செய்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஆரம்பத்தில் மக்காவாசிகளின் ஆடுகளை மேய்த்து அதற்கு பகரமாக தானியங்களை பெற்று வருவார்கள்.

*அதன் பின்னர் “ ஸாயிப் அல் மக்சூமி” என்பவருடன் சேர்ந்து வியாபாரம் செய்தார்கள்.*

## 4. கதீஜா (ரலி)

*அக்காலத்தில் மக்காவில்* **கதீஜா பின் குவைலித்** *என்ற பெண்மணி இருந்தார்கள். குரைஷி தலைவர்களின் குடும்பத்தைச் சேர்ந்த இந்தப் பெண்மணி கண்ணியமும், ஒழுக்கமும் நிறைந்தவர்களாக இருந்தார்கள்.*

*அறிவுக் கூர்மையும், நற்குணமும் மிக்கவர்கள். செல்வ வசதியையும் பெற்றவர்களாக இருந்தார்கள். மிகப்பெரிய அளவில் வியாபாரம் செய்து வந்தார்கள்.*

*நம்பிக்கையான ஆட்களை வேலைக்கு அமர்த்தி பல நாடுகளுக்கு வியாபார பொருட்களை அனுப்பி வந்தார்கள்.*

*40 வயதை அடைந்த கதீஜா அவர்களின் கணவர் இறந்து விட்டார். நான்கு பிள்ளைகள் இருந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் உயர்குணங்களை கேள்விப்பட்டு அவர்களை தன் வியாபாரத்தில் பொறுப்பாளராக நியமித்து ஷாம் நாட்டுக்கு அனுப்பி வைத்தார்கள்.*

*பெருமானார் (ஸல்) அவர்கள் மிகச்சிறந்த முறையில் வியாபாரம் செய்து நேர்மையான முறையில் நல்ல இலாபம் பெற்று வந்தார்கள்.*

*இந்தப் பயணத்தில் நபி (ஸல்) அவர்கள் நடந்து கொண்ட முறை, அவர்களின் உயர்ந்த ஒழுக்க முறைகளை அவர்களோடு சென்ற “***மைசரா***” என்ற அடிமை கதீஜாவிடம் வந்து சொன்னார்கள்.*

*அதைக் கேட்ட கதீஜா (ரலி) அவர்கள் நபி அவர்களை தான் திருமணம் செய்து கொள்ள நாடி அதுபற்றி அபூதாலிபிடம் பேசினார்கள். அதை ஏற்றுக் கொண்ட அபூதாலிப் 25 வயது நிறைந்த நபி (ஸல்) அவர்களை 40 வயது*

நிறைந்த கதீஜா (ரலி) அவர்களுக்கு திருமணம் செய்து வைத்தார்கள்.

நபி (ஸல்) அவர்களுக்கு கதீஜா (ரலி) அவர்கள் மூலமாக காசிம், அப்துல்லாஹ் என்று இரு ஆண் பிள்ளைகளும், ஜைனப், ருகைய்யா, உம்மு குல்சூம், பாத்திமா ஆகிய 4 பெண் பிள்ளைகளும் பிறந்தார்கள்.

இந்த அப்துல்லாஹ்வுக்கு தய்யிபு, தாஹிர் என்ற வேறு பெயர்களும் உண்டு. முதல் குழந்தை காசிம் என்பதால் நபி (ஸல்) அவர்களுக்கு **அபுல் காசிம்** என்று பட்டப்பெயர் ஏற்பட்டது.

காசிம், அப்துல்லாஹ் இருவரும் குழந்தை பருவத்திலேயே இறந்து விட்டார்கள்.

## 5. கஃபாவை கட்டுதல்

நபி (ஸல்) அவர்களுக்கு 35 வயது ஆன போது குரைஷிகள் பழமை அடைந்து விட்ட கஃபாவை புதிதாக கட்ட ஆரம்பித்தார்கள். **(படம் - 12)**

பணி நிறைவடையும்நேரத்தில் "**ஹஜருல் அஸ்வத்**" கல்லை கஃபாவின் சுவற்றில் பதிய வைப்பதற்காக மக்களிடையே பெரிய போட்டி ஏற்பட்டது. **(படம் - 13,14)**

ஒவ்வொரு கூட்டத்தினரும் அதை எடுத்து வைக்கும் பாக்கியம் எங்களுக்கு தான் வேண்டுமென்று சண்டையிட்டுக் கொண்டார்கள்.

இறுதியாக இப்போது யார் முதலில் கஃபாவிற்கு வருவாரோ, அவருடைய பேச்சைக் கேட்டு எல்லாரும் ஒப்புக் கொள்வது என்று முடிவு செய்தார்கள்.

அவர்கள் எதிர்பார்த்து அமர்ந்து கொண்டிருந்த போது அங்கு நபி (ஸல்) அவர்கள் தான் முதலில் வந்தார்கள்.

உடனே அனைவரும் மகிழ்ச்சியோடு இதோ

உண்மையாளர் வந்து விட்டார். நம்பிக்கைக்குரியவர் வந்து விட்டார் என்று சப்தமிட்டார்கள். நபி (ஸல்) அவர்களிடத்திலே தீர்ப்பு கேட்டார்கள்.

உடனே நபி (ஸல்) அவர்கள் போர்வையை விரித்து அதில் ஹஜருல் அஸ்வத் கல்லை எடுத்து வைத்தார்கள். பின்பு எல்லா கோத்திரக்காரர்களின் தலைவர்களையும் அழைத்து ஆளுக்கொரு பக்கமாக பிடித்து தூக்கி கொண்டு வரவேண்டும் என்று சொன்னார்கள்.

எல்லாரும் தூக்கி வந்தார்கள். இறுதியாக அந்தக் கல்லை எடுத்து சுவற்றில் வைத்தார்கள். இவ்வாறாக மிகப் பெரிய பிரச்சனையை மிக எளிமையாக தீர்த்து வைத்தார்கள்.

## 6. ஹில்ஃபுல் ஃபுழூல் (சிறப்பு மிகு ஒப்பந்தம்)

ஒரு வெளியூர் வியாபாரி மக்காவில் பொருட்களைக் கொண்டு வந்து வியாபாரம் செய்தார். மக்காவைச் சார்ந்த ஒரு செல்வந்தர் அந்த பொருட்களை வாங்கிக் கொண்டு காசு கொடுக்காமல் ஏமாற்றிவிட்டார். அவர் பலபேரிடம் சென்று முறையிட்டார். ஆனால் அந்த பணக்காரருக்கு பயந்து யாரும் உதவி செய்ய முன்வரவில்லை.

இதைக் கண்டு மக்காவில் உள்ள சில நல்லடியார்கள் ஒன்று சேர்ந்து ஒப்பந்தம் செய்தார்கள். இதில் நபி (ஸல்) அவர்களும் கலந்துக் கொண்டார்கள்.

அநீதிகளை தட்டிக்கேட்க வேண்டும். பாதிக்கப் பட்டவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்று முடிவு செய்தார்கள். அதன் பிறகு அந்த வியாபாரியின் சரக்குகளை மீட்டுக் கொடுத்தார்கள். இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் இளமையிலேயே தன்னார்வ சேவைக் குழுவில் இணைந்து மக்கள் சேவை செய்து வந்தார்கள்.

பகுதி – 4

# நுபுவ்வத்தும் அழைப்புப் பணியும்

## 1. நபிப் பட்டம் அருளப்படுதல்

நபி (ஸல்) அவர்களுக்கு நாற்பது வயது ஆன போது அவர்கள் மிகுதமாக தனிமையில் அமர்ந்து அல்லாஹ்வை திக்ரு செய்து வருவார்கள்.

மக்காவிற்கு அருகிலிருந்த “நூர்” என்ற மலையில் ஏறி “**ஹீரா**” குகை என்று அழைக்கப்பட்ட ஒரு குகையில் தங்கி படைத்தவனையும், படைப்புகளையும் சிந்திப்பார்கள். தேவைப்படும் போது உணவும், தண்ணீரும் எடுத்துக் கொண்டு மீண்டும் அங்கு செல்வார்கள். அவர்கள் மலைப்பாதையில் செல்லும் போது அங்கிருக்கும் கற்களும், மரங்களும் அவர்களை நோக்கி அல்லாஹ்வின் தூதரே! அஸ்ஸலாமு அலைக்கும் என்று கூறும், இதைக் கண்டு நபி (ஸல்) அவர்கள் ஆச்சரியம் அடைவார்கள்.

இரவு தூக்கத்தில் சில கனவுகள் காணுவார்கள். விடிந்தவுடன் அது அப்படியே நடப்பதை பார்ப்பார்கள். இவ்வாறு நுபுவத்துடைய அடையாளங்கள் கொஞ்சம் கொஞ்சமாக வெளிபட்டது.

ஒருநாள் ஹீரா மலைக்குகையில் திக்ரு செய்து கொண்டிருந்த போது வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்கள்

நபி (ஸல்) அவர்கள் முன் வந்து இக்ரஃ (ஓதுவீராக ) என்று கூறினார்கள். நான் ஓதுபவனாக இல்லை என்று பதில் சொன்னார்கள். அப்போது வானவர் ஜிப்ரயீல் (அலை) நபி அவர்களை நெஞ்சோடு கட்டியணைத்து, மீண்டும் ஓதுவீராக என்று கூறினார்கள். நான் ஓதுபவனாக இல்லை என்று மீண்டும் சொன்னார்கள். ஜிப்ரயீல் (அலை) அவர்கள் மீண்டும் கட்டியணைத்து அனைத்தையும் படைத்தானே அந்த அல்லாஹ்வின் பெயரைக் கொண்டு ஓதுவீராக! என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் ஓதினார்கள்.**(படம் - 25,26)**

நபி (ஸல்) அவர்கள் அச்சம் மிகுந்தவர்களாக கதீஜா (ரலி) அவர்களிடம் வந்து, "என்னை போர்த்துங்கள், என்னை போர்த்துங்கள்" என்று கூறினார்கள். கதீஜா (ரலி) போர்த்திவிட்டார்கள். பின்னர் நடந்த சம்பவங்களை எல்லாம் கதீஜா (ரலி) அவர்களிடம் கூறி பயமாக இருப்பதாக தெரிவித்தார்கள். அதற்கு கதீஜா (ரலி) அவர்கள் "நடந்தது நல்லதற்காக தான் நடந்தது. அல்லாஹுத்தஆலா உங்களை இழிவுபடுத்தமாட்டான். நீங்கள் உறவுகளை ஆதரிக்கிறீர்கள், சிரமப்படுபவர்களுக்கு உதவி செய்கிறீர் கள், ஏழைகளுக்காக உழைக்கிறீர்கள், விருந்தினர்களை சங்கை செய்கிறீர்கள், எனவே உங்களுக்கு எந்த தீங்கும் நிகழாது" என்று கூறினார்கள்.

## 2. வரகா இப்னு நவ்ஃபல்

கதீஜா (ரலி) அவர்களுடைய சிறிய தந்தையின் மகன் வரகா இப்னு நவ்ஃபல், முந்திய வேதங்களை கற்றறிந்த அறிஞராக இருந்தார். நபி (ஸல்) அவர்களை அவரிடம் அழைத்து சென்று கதீஜா (ரலி) அவர்கள் நடந்த விஷயங்களைக் கூறி ஆலோசனைக் கேட்டார்கள். அதைக் கேட்ட வரகா இப்னு நவ்ஃபல் உங்களை அல்லாஹ் இந்த உம்மத்துடைய நபியாக ஆக்கியிருக்கிறான். மூஸா நபியிடம் வந்த நாமூஸ் (ஜிப்ரயீல்) என்ற மலக்குதான்

உங்களிடம் வந்தார்கள். இந்த ஊர்வாசிகள் உங்களை ஏற்றுக் கொள்ளாமல் துன்புறுத்துவார்கள். ஊரை விட்டு வெளியேற்றுவார்கள் என்று கூறினார்.

என்மேல் பிரியமாக இருக்கும் மக்களா என்னை வெளியேற்றுவார்கள்? என்று ஆச்சரியப்பட்டு, இவர்களா வெளியேற்றுவார்கள் என்று நபி (ஸல்) கேட்டார்கள். ஆம். இறைச்செய்தியை கொண்டு வந்த எல்லா நபிமார்களையும் மக்கள் எதிர்க்கவே செய்தார்கள். அந்த நேரத்தில் நான் உயிரோடு இருந்தால் நிச்சயமாக உங்களுக்கு நான் மிகவும் உதவி செய்வேன். ஆனால் வரகா அவர்கள் விரைவிலேயே மரணமடைந்து விட்டார்கள்.

## 3. இஸ்லாத்திற்கு அழைக்குதல்

"லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்"

"வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுடைய தூதராக இருக்கிறார்கள்" என்ற திருக் கலிமாவின் பக்கம் மக்களை அழைக்கும்படி அல்லாஹ் நபியவர்களுக்கு உத்தரவிட்டான். நபி (ஸல்) அவர்கள் இஸ்லாத்தின் பக்கம் மக்களை அழைத்தார்கள். அருமை துணைவியார் **கதீஜா** (ரலி) அவர்களும், நபிகளாரின் தோழர் **அபூபக்கர்** (ரலி) அவர்களும், நபிகளாரின் அடிமையான **ஜைதுபின்ஹாரிஸா** (ரலி) அவர்களும், நபி (ஸல்) அவர்களின் பொறுப்பில் வளர்ந்து வந்த சிறியவர் **அலி** (ரலி) அவர்களும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

அதன் பின் அபூபக்கர் (ரலி) அவர்கள் தனது நெருங்கிய நண்பர்களையும் இஸ்லாத்தில் இணையச் செய்தார்கள். உஸ்மான் இப்னு அஃப்ஃபான் (ரலி), ஜுபைர் இப்னு அவ்வாம் (ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி), ஸஅது இப்னு அபீவக்காஸ் (ரலி), தல்ஹா இப்னு உபைதுல்லா (ரலி) அவர்களும் ஒருவருக்குப் பின் ஒருவராக

இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

## 4. பகிரங்க அழைப்பு

ஆரம்ப மூன்று வருடங்களாக நபி (ஸல்) அவர்கள் இஸ்லாத்தை மறைமுகமாக போதித்து வந்தார்கள். மறைமுகமாக தொழுகையும் நடத்தி வந்தார்கள். அதன்பின் அல்லாஹுத்தஆலா "உங்கள் நெருங்கிய உறவினர்களை அச்சமூட்டி எச்சரிக்கை செய்யுங்கள் என்றும், உங்களுக்கு ஏவப்பட்டதை நீர் பகிரங்கப்படுத்துங்கள்" என்றும் ஆயத்தை இறக்கினான். உடனே நபி (ஸல்) அவர்கள் தங்களின் குடும்பத்தினரை அழைத்து அல்லாஹ்வைப்பற்றி எடுத்துரைத்தார்கள்.

அங்கிருந்த "**ஸபா**" என்ற மலையின் மீது ஏறி நின்று "யா ஸபாஹா, யா ஸபாஹா" என்று சப்தமிட்டார்கள். ஏதோ ஒரு பெரிய ஆபத்து வரப்போகிறது என்றால் இவ்வாறு சப்தம் இடுவது வழக்கம். பெருமானாரின் குரலை கேட்டு மக்கள் அனைவரும் ஒன்று திரண்டார்கள். அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் "இந்த மலைக்குப் பின்னால் ஒரு பெரிய குதிரைப்படை உங்களை தாக்குவதற்காக வந்து கொண்டிருக்கிறது என்று நான் கூறினால் நம்புவீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மக்கள் "நிச்சயமாக நம்புவோம். தாங்கள் உண்மையாளர். ஒரு போதும் பொய் சொன்னதில்லை" என்று கூறினார்கள்.

அப்போது நபி (ஸல்) அவர்கள் "இதோ அல்லாஹ் வுடைய கடுமையான வேதனை வந்து கொண்டிருக்கிறது என்று நான் உங்களை எச்சரிக்கிறேன். மக்களே! நரகை விட்டும் உங்களை பாதுகாத்துக் கொள்ளுங்கள். கலிமாவின் பக்கம் வாருங்கள்" என்று அழைத்தார்கள். ஒவ்வொரு கூட்டத்தினர் பெயரைச் சொல்லி அழைத்து, "நீங்கள் ஒவ்வொருவரும் உங்களை நரகை விட்டும் பாதுகாத்துக் கொள்ளுங்கள். நீங்கள் ஈமான் கொள்ளாவிட்டால் நமது

உறவுமுறை அல்லாஹ்வை விட்டும் உங்களை பாதுகாக்காது" என்று கூறினார்கள்.

மக்கள் எந்த பதிலும் கூறாமல் கலைந்து சென்றார்கள். ஆனால் அங்கிருந்த பெருமானாரின் சிறிய தந்தை **அபூலஹப்** மட்டும், உனக்கு நாசம் உண்டாவதாக! இதற்கு தான் எங்களை ஒன்று கூட்டினாயா! என்று கேட்டான். கையால் மண்ணை வாரி வீசினான்.

அப்போது அல்லாஹுதஆலா "தப்பத் யதா அபிலஹபின் (அபூலஹபின் இரண்டு கைகள் நாசமாகட்டும், அவனும் நாசமாகட்டும்) என்ற ஆயத்தை இறக்கினான்.

இதன் பின் நபி (ஸல்) அவர்கள் பகிரங்கமாக கடைத் தெருக்களிலும், சந்தைகளிலும், மக்கள் ஒன்று கூடும் இடங்களிலும் அல்லாஹ்வைப் பற்றி எடுத்துரைத்தார்கள்.

ஹஜ்ஜுக்காக பல ஊர்களிலிருந்து வந்த மக்களிடம் ஒவ்வொரு கூடாரமாக சென்று இஸ்லாத்தின் பக்கம் அழைத்தார்கள். அபூஜஹ்ல் முதலிய குரைஷி தலைவர்கள் நபி (ஸல்) செல்லும் இடங்களிலெல்லாம் சென்று "இவர் பொய்யர், சூனியக்காரர், இவர் பைத்தியம் பிடித்தவர், ஜோசியக்காரர், பொய்யான கவிஞர். இவர் பேச்சை கேட்காதீர்கள்" என்று கூறி மக்களை தடுத்தார்கள்.

## 5. அபூதாலிபிடம் தூது

நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தையான அபூதாலிப் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. என்றாலும் நபி (ஸல்) அவர்களுக்கும், மற்ற முஸ்லிம்களுக்கும் ஆதரவாக இருந்தார்கள். எதிரிகள் நபி (ஸல்) அவர்களுக்கு தொல்லைகள் தரும் பொழுதெல்லாம் அபூதாலிப் அவர்களை காப்பாற்றி அரவணைத்து கொள்வார்கள். மக்காவின் மூத்த தலைவரான அபூதாலிபை நேரடியாக

எதிர்க்க முடியாமல் குரைஷிகள் தயங்கி வந்தார்கள். அபூதாலிபையும் இஸ்லாத்திற்கு வரும்படி நபி (ஸல்) அவர்கள் பலமுறை அழைத்தும் அவர்கள் இஸ்லாத்திற்கு வரவில்லை.

ஒருமுறை அபூதாலிபிடம் குரைஷி தலைவர்கள் எல்லோரும் வந்து, "அபூதாலிபே! உங்கள் சகோதரர் மகன் எங்கள் மார்க்கத்தையும் குறை கூறுகிறார். எங்கள் கடவுள் களையும் மறுத்து வருகிறார். எங்கள் முன்னோர்களை யெல்லாம் வழிதவறியவர்கள் என்கிறார். இதை இனியும் நாங்கள் பொறுக்க மாட்டோம். நீங்கள் அவரை திருத்துங்கள். இல்லையேல் எங்களிடம் ஒப்படைத்து விடுங்கள்" என்று கூறிவிட்டு சென்று விட்டார்கள்.

அபூதாலிப் அவர்கள் இந்த செய்தியை நபி (ஸல்) அவர்களிடம் கூறிய போது, "என் அருமை தந்தையே! அந்த மக்கள் சூரியனை என் வலது கையிலும், சந்திரனை என் இடது கையிலும் வைத்தாலும் நான் மார்க்கப்பணியை நிறுத்த மாட்டேன். இந்த இஸ்லாத்தை அல்லாஹுத்தஆலா உயர்த்திடச் செய்யும் வரை அல்லது நான் அழிந்து போகும் வரை இந்தப் பணியை தொடர்வேன்" என்று கூறினார்கள். அவர்களின் மன உறுதியைப் பார்த்த அபூதாலிப், என் அன்புச் சகோதரரின் மகனே! நீர் உம் பணியை தொடர்ந்து செய். நான் என்றென்றும் உனக்கு உதவி செய்வேன். உன்னை யாரிடத்திலும் ஒப்படைக்க மாட்டேன் என்று கூறினார்கள்.

## 6. குறைஷிகளின் துன்புறுத்தல்

இஸ்லாம் வளர்வதை பொறுக்க முடியாத குரைஷிகள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்பவர்களை மிகக் கடுமையாக துன்புறுத்தினார்கள். முஸ்லிம்களைக் கேலி செய்தார்கள், திட்டினார்கள், சிறைபிடித்தார்கள், அடித்து உதைத்தார்கள். இன்னும் எல்லா வகையிலும் வேதனை

படுத்தினார்கள். அதிகம் ஆதரவற்ற ஏழைகள், அனாதைகள், அடிமைகளை மிகக் கடுமையாக துன்புறுத்தினார்கள்.

உமைய்யா என்பவரின் அடிமையாக இருந்த **பிலால்** (ரலி) அவர்கள் இஸ்லாத்திற்கு வந்து விட்டார்கள். அதை கேள்விப்பட்ட உமைய்யா இஸ்லாத்தை விட்டுவிடும்படி கூறி அவரை கொடுமைப்படுத்தினான். கட்டி வைத்து கடுமையாக அடித்தான். உணவு, தண்ணீர் கொடுக்காமல் பட்டினி போட்டான். உடலில் கயிற்றைக் கட்டி தெருத் தெருவாக இழுத்து செல்லும்படி கூறினான். ஆனாலும் பிலால் (ரலி) அவர்கள் "**அஹத், அஹத்**" அல்லாஹ் ஒருவனே அல்லாஹ் ஒருவனே என்று கூறிக் கொண்டிருப்பார்கள். கொதிக்கும் பாலைவன மணலில் அவர்களைப் போட்டு நெஞ்சிலே பெரிய பாராங்கல்லை தூக்கி வைத்து விடுவான். அங்குமிங்கும் அசைய முடியாத நிலையில் "அஹத் அஹத்" என்று சொல்லுவார்கள். இவ்வாறு தினமும் அவர்கள் சித்ரவதை செய்வதைக் கண்டு ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் விலை கொடுத்து வாங்கி அவர்களை உரிமை விட்டார்கள்.

ஹஜ்ரத் **அம்மார்** (ரலி) அவர்களும், அவர்களின் தந்தை **யாசிர்** (ரலி), தாயார் **சுமைய்யா** (ரலி) அவர்களும் மக்ஜூம் கிளையைச் சேர்ந்த அபூஹுதைஃபா இப்னு முகீரா என்பவனின் அடிமைகளாக இருந்தார்கள். இந்த மூவரையும் பாலைவன மணலில் கிடத்தி கொடுமை செய்தார்கள். அதைப் பார்த்த நபி (ஸல்) அவர்கள் "யாசிருடைய குடும்பத்தார்களே! பொறுமை கொள்ளுங்கள் அல்லாஹ் உங்களுக்கு சொர்க்கத்தை வாக்குறுதி அளித்துள்ளான்" என்று கூறினார்கள். சுமைய்யா (ரலி) அவர்களை அபூஜஹ்ல் ஈட்டியால் குத்தி கொன்று விட்டான். இவர்கள் தான் இஸ்லாத்திற்காக முதலில் உயிர்த்தியாகம் செய்து ஷஹீது ஆனவர்கள்.

**ஹப்பாப்** (ரலி) அவர்களை அவர்களின் எஜமானாகிய ஒரு பெண்மணி மிகவும் கொடுமை செய்தார். இரும்பை பழுக்க காய்ச்சி தலையிலும், முதுகிலும் சூடு போட்டார்கள். நெருப்புக் கங்குகள் மீது படுக்க வைப்பார்கள். அதனால் உடல் பொசுங்கி கொழுப்புகள் உருகி நெருப்பை அணைத்து விடும்.

அன்னை ஜின்னீரா(ரலி) அவர்களை அவர்களின் எஜமான் சாட்டையால் கடுமையாக அடித்தான். கண்ணில் அடிபட்டு கண்பார்வை போய்விட்டது. எங்கள் கடவுள்கள் உமது கண்ணை பறித்து விட்டன என்று அவர்களை கேலி செய்தனர். அதற்கு ஜின்னீரா (ரலி) அவர்கள் "இல்லை, இல்லை அல்லாஹ் தான் இவ்வாறு செய்தான். அவன் நாடினால் அதை மீண்டும் சரி ஆக்கிவிடுவான்" என்று கூறினார்கள். மறுநாள் அல்லாஹ் அவர்களுக்கு பார்வையை கொடுத்து விட்டான். அதைக் கண்ட குரைஷியர்கள், "இதுவும் முஹம்மதின் (ஸல்) சூனியம்" என்று கூறினார்கள்.

**முஸ்அப் இப்னு உமைர்** (ரலி) அவர்கள் மிகவும் வசதி வாய்ந்த குடும்பத்தில் செல்லப்பிள்ளையாக இருந்தார்கள். தினமும் புதிய புதிய விலை உயர்ந்த ஆடைகளையே அணிவார்கள். அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதும் அவர்களின் தாயும், தந்தையும் இடுப்பிலே கட்டுவதற்கு பழைய துணியை மட்டும் கொடுத்து துரத்திவிட்டார்கள்.

**அபூபக்கர்** (ரலி) அவர்களையும்நினைவிழந்து மயக்கம் ஆகும் வரை அடித்தார்கள்.

**உஸ்மான் இப்னு மள்ஊன்** (ரலி) அவர்களுக்கு வலீது இப்னு முகைரா என்ற குரைஷி தலைவன் பாதுகாப்பு கொடுத்து இருந்தான். அவனுக்கு பயந்து மக்கள் உஸ்மான் (ரலி) அவர்களை தொந்தரவு செய்யாமல் இருந்தார்கள். ஒருநாள் அவர்கள் "எனக்கு அல்லாஹ்வின் பாதுகாப்பைத் தவிர வேறு யாருடைய பாதுகாப்பும் தேவையில்லை" என்று

கூறிவிட்டார்கள். அதன் பின் ஒரு காபிர் அவர்களை ஓங்கி அரைந்ததில் கண்ணில் காயம் உண்டாகி விட்டது. அதைப் பார்த்த வலீது "என் பாதுகாப்பில் இருந்திருந்தால் உன் கண்ணுக்கு இப்படி ஆகியிருக்காதே" என்று கூறினான். அதற்கு உஸ்மான் (ரலி) அவர்கள் "இல்லை, இல்லை எனது இன்னொரு கண்ணுக்கும் அந்த பாக்கியம் கிடைக்க வேண்டும் என் ஆசைப்படுகிறேன்" என்று கூறினார்கள்.

## 7. நபி (ஸல்) அவர்களுக்கு தந்த தொல்லைகள்

நபி (ஸல்) அவர்களையும் அந்த மக்கள் விட்டு வைக்கவில்லை. அவர்கள் செல்லும் இடமெல்லாம் சென்று பொய்யர் என்றும், சூனியக்காரர் என்றும், பைத்தியம் என்றும் ஏசினார்கள். பலர் சேர்ந்து சூழ்ந்து கொண்டு நபியவர்களைத் தாக்குவார்கள். அபூபக்கர் (ரலி) குறுக்கே பாய்ந்து காப்பாற்றி வருவார்கள். நபி (ஸல்) அவர்கள் செல்லும் வழியிலும் அவர்கள் வீட்டு வாசலிலும் முற்களைப் போட்டு விடுவார்கள்.

நபி (ஸல்) அவர்களின் வீட்டிற்குள் ஆட்டுக்குடலை தூக்கி வீசுவார்கள். ஒருமுறை நபி (ஸல்) அவர்கள் கஃபாவில் தொழுது கொண்டிருக்கும் போது ஒட்டகத்தின் பெருங் குடலை தூக்கி கொண்டு வந்து நபி (ஸல்) அவர்களின் முதுகில் போட்டு விட்டார்கள். நபியவர்கள் தலையை கூட தூக்க முடியவில்லை. பாத்திமா (ரலி) அவர்கள் ஓடிவந்து அதை அகற்றிய போது தான் நபயிவர்கள் தலையை தூக்கினார்கள்.

இது போன்ற எதிர்ப்புகளால் மன வேதனைப்பட்டு ஒருமுறை வீட்டிற்கு வந்த நபி (ஸல்) அவர்கள் போர்த்திப் படுத்துக் கொண்டார்கள். உடனே அல்லாஹுத் தஆலா "போர்வை போர்த்திக் கொண்ட நபியே! நீங்கள் எழுந்து சென்று மக்களுக்கு எச்சரிக்கை செய்யுங்கள். அவர்கள் தரும் சோதனைகளை இறைவனுக்காக பொறுத்துக்

கொள்ளுங்கள்" என்று ஆறுதல் கூறினான்.

ஒருமுறை அபூபக்கர் சித்தீக்(ரலி) அவர்களை மிக கடுமையாக அடித்து மூக்கை உடைத்து விட்டார்கள். அவர்கள் இறந்து விடுவார்களோ என்று எண்ணும் அளவிற்கு அடித்தார்கள். அதனால் நினைவிழந்து மயக்கமாகி விட்டார்கள். உறவினர்கள் அவர்களின் வீட்டில் கொண்டு வந்து படுக்க வைத்தார்கள். அரைநாள் கழித்து கண்விழித்தவுடன் "முதலில் நபி (ஸல்) அவர்கள் எப்படி இருக்கிறார்கள்?" என்று கேட்டார்கள். அவர்களுக்கு தண்ணீர் கொடுத்த போது, இல்லை, இல்லை நபியவர்களை கண்ணால் பார்க்கும் வரை நான் எதையும் சாப்பிட மாட்டேன், குடிக்கமாட்டேன் என்று கூறினார்கள்.

"அவர்களால் தானே உங்களுக்கு இவ்வளவு சிரமம். இன்னும் அவர்களைப் பற்றி கேட்கிறீர்களே!" என்று சில உறவினர்கள் கோபித்துக் கொண்டார்கள். ஆனாலும் அவர்கள் தண்ணீர் குடிக்கவில்லை. பின்னர் இரவு நேரம் வந்தது, மக்கள் நடமாட்டம் குறைந்த போது அவர்களை நபி (ஸல்) அவர்களிடம் தூக்கிச் சென்றார்கள். அவர்களை ஸலாமத்தாக பார்த்த பின்புதான் தண்ணீர் குடித்தார்கள். அவர்களின் அன்பைக் கண்டு நபி (ஸல்) அவர்களுக்காக துஆ செய்தார்கள்.

குரைஷியர்களின் எதிர்ப்பு கடுமையான போது நபி (ஸல்) அவர்கள் அர்கம் (ரலி) என்ற ஸஹாபியின் வீட்டில் ரகசியமான முறையில் மார்க்க போதனைகள் செய்து வந்தார்கள்.புதிதாக இஸ்லாத்திற்கு வரக்கூடியவர்களையும் அங்கு அழைத்து வந்து கலிமா சொல்லிக் கொடுப்பார்கள். பல ஸஹாபாக்கள் தாங்கள் முஸ்லிமாகியதை வெளியே சொல்லாமல் இரகசியமாக வைத்துக் கொண்டார்கள்.

## 8. முதல் ஹிஜ்ரத்

ஹிஜ்ரத் என்றால் ஊரை விட்டு வேறு ஊருக்கு குடி பெயர்தல் என்று பொருள். அக்காலத்தில் **ஹபஷா** (அபிசீனியா) நாட்டின் மன்னராக **நஜ்ஜாஷி** என்ற நல்லவர் இருந்தார். அவர் மிகவும் நீதமான அரசர். கிறிஸ்துவரான அவர் யாருக்கும் அநீதி செய்வதில்லை.

முஸ்லிம்கள் அங்கு சென்று கொஞ்சநாள் வாழ்ந்தால் மக்காவாசிகளின் கொடுமைகளை விட்டு தப்பிக்கலாம் என்று நபி (ஸல்) அவர்கள் நினைத்தார்கள். முஸ்லிம்களில் ஒரு குழுவினரை நபி (ஸல்) அவர்கள் ஹபஷாவிற்கு அனுப்பி வைத்தார்கள். அதில் பன்னிரண்டு ஆண்களும், நான்கு பெண்களும் இருந்தார்கள். நபித்துவத்தின் 5ஆம் ஆண்டு இது நிகழ்ந்தது. **(படம் - 29)**

சிலமாதங்கள் அங்கே நிம்மதியாக வாழ்ந்தார்கள். அப்போது மக்காவின் நிலை சரி ஆகிவிட்டது எனத் தவறான தகவல் அவர்களை வந்து அடைந்தது. எனவே அவர்கள் மீண்டும் மக்காவிற்கு திரும்பி வந்து விட்டார்கள். ஆனால் மக்காவில் முன்பை விட அதிகமாக முஸ்லிம்களை கொடுமைபடுத்தினர். எனவே முஸ்லிம்கள் பலரும் மீண்டும் ஹபஷாவிற்கு சென்று விட முடிவு செய்தார்கள்.

இந்த முறை 83 ஆண்களும், 18 பெண்களும் ஹபஷாவிற்கு சென்று தங்கினார்கள். இங்கே அவர்களை கொடுமை செய்து வந்த காஃபிர்கள், அவர்கள் அங்கு சென்று நிம்மதியாக இருப்பதையும் விரும்பவில்லை. அந்த நாட்டு மன்னரிடத்தில் இவர்களைப் பற்றி தவறாக கூறி அங்கிருந்தும் துரத்தி விட திட்டமிட்டார்கள். அதற்காக **அம்ரு இப்னு ஆஸ்** மற்றும் **அப்துல்லாஹ் இப்னு அபூரபீஆ** ஆகிய இரண்டு நபர்களை ஹபஷாவிற்கு அனுப்பி வைத்தார்கள்.

அந்த இருவரும் ஹபஷா வந்து முதலில் மதகுருமார்களை சந்தித்து அவர்களுக்கு அன்பளிப்பு கொடுத்து, இந்த முஸ்லிம்களை எப்படியாவது துரத்திவிட வேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள். பின்னர் மன்னர் நஜ்ஜாஸியை சந்தித்துஅவர்களுக்கு அன்பளிப்பு கொடுத்து எங்கள் ஊரிலிருந்து சிலகுழப்பவாதிகள் இங்கு வந்துள்ளார்கள். அவர்களை எப்படியாவது திருப்பி அனுப்பிவிட வேண்டும் என்றார்கள். லஞ்சம் வாங்கிய மதகுருமார்களும் "ஆமாம் ஆமாம் அவர்களை இங்கிருந்து அனுப்பிவிட வேண்டும்" என்று கூறினார்கள்.

ஆனால் நஜ்ஜாஷி மன்னர் நாம் விசாரணை செய்து தான் முடிவெடுப்போம் என்று கூறி, முஸ்லிம்களை அங்கு அழைத்து வரச் செய்து விசாரணை செய்தார்கள்.

அங்கிருந்த **ஜஃபர்இப்னுஅபூதாலிப்** (ரலி) அவர்கள் மிக உருக்கமாக ஒரு நீண்ட பிரச்சாரம் செய்தார்கள். அதில் அறியாமைக் காலத்தில் மக்கள் வாழ்ந்த கேடுகெட்ட வாழ்க்கையைப் பற்றியும், அவர்கள் வணங்கிவந்த ஆயிரக்கணக்கான தெய்வங்களைப் பற்றியும் கூறினார்கள்.

அதன்பின் அல்லாஹ்வின் திருத்தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் வந்து ஓர் இறைவணக்கத்தை சொல்லிக் கொடுத்தார்கள். கொலை, கொள்ளை, திருட்டு, விபச்சாரம் வட்டி மற்றும் பொய், புறம் போன்ற கொடுமைகளை தடுத்தார்கள் என்பதையும், மக்கா குரைஷிகள் செய்த கொடுமைகளையும் கூறினார்கள். எனவே அங்கிருந்து தப்பி அடைக்கலம் தேடி இந்த நாட்டிற்கு வந்திருக்கிறோம் என்றார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்ட குர்ஆனுடைய வசனங்களை ஓதிக்காட்டினார்கள்.

இதைக் கேட்ட மன்னரும், மற்றவர்களும் தாடி நனையும் வரை அழுதனர். நீங்கள் சொல்வதெல்லாம் உண்மை தான். நீங்கள் எங்கள் ஊரில் சந்தோஷமாக

வாழுங்கள் என்று மன்னர் கூறினார்.

அதைக் கண்ட அம்ரு இப்னு ஆஸ் கிறிஸ்துவரான நஜ்ஜாஷி மன்னரிடம், இவர்கள் உங்கள் நபியாகிய ஈஸாவைப் பற்றி தவறாகப் பேசுகிறார்கள் என்று கூறினார். அதற்கு ஜஃபர் இப்னு அபூதாலிப் (ரலி) அவர்கள் எங்கள் நபி (ஸல்) அவர்கள் ஈஸா நபியைப் பற்றி கூறியதாவது, அவர்கள் அல்லாஹ்வுடைய அடியாராகவும் தூதராகவும் இருந்தார்கள். கண்ணியம் மிக்க கன்னிப் பெண்ணாகிய மர்யம் (அலை) அவர்களுக்கு, அல்லாஹ்வுடைய சொல்லால் உண்டானார்கள். அல்லாஹ்வால் உயிர் ஊதப்பட்டார்கள்.

இதைக் கேட்டப்பின் நஜ்ஜாஷி மன்னர் “இதுதான் உண்மை. இப்படித்தான் நபி ஈஸா (அலை) அவர்களும் கூறினார்கள்” என்று கூறினார். மேலும் முஸ்லிம்களை கண்ணியப்படுத்தி தனது நாட்டிலேயே தங்க வைத்தார். மக்காவில் இருந்து வந்தவர்களிடம் அவர்களின் அன்பளிப்பை திருப்பி கொடுத்து மக்காவுக்கே அனுப்பி விட்டார்.

## 9. ஹம்ஜா (ரலி) இஸ்லாத்திற்கு வருதல்

**ஹம்ஜா** (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தையும், மிகப்பெரிய வீரரும் ஆவார்கள். நபிப்பட்டம் கிடைத்து ஆறு ஆண்டுகள் வரை அவர்கள் இஸ்லாத்திற்கு வரவில்லை. ஆனால் நபி (ஸல்) அவர்கள் மீது மிகுந்த அன்பும், பாசமும் வைத்திருந்தார்கள்.

ஒருமுறை ஹம்ஜா (ரலி) அவர்கள் வேட்டைக்காக காட்டிற்கு சென்றிருந்த போது, நபி (ஸல்) அவர்களை அபூஜஹ்ல் கடுமையாக திட்டி கல்லால் தலையில் அடித்து விட்டான். நபி (ஸல்) அவர்களின் புனித தலையிலிருந்து இரத்தம் கசிந்தது. வேட்டையிலிருந்து திரும்பிய ஹம்ஜா (ரலி) அவர்கள் நடந்த சம்பவத்தைக் கேட்டு மிகவும்

கோபம் அடைந்தார்கள். நேரடியாக அபூஜஹ்லிடம் சென்று தனது அம்பால் அவனது தலையில் ஓங்கி அடித்து அவனை காயப்படுத்தினார்கள். "என் சகோதரரின் மகனையா திட்டுகிறாய்?அடிக்கிறாய்? நானும் அவருடைய மார்க்கத்தில் தான் இருக்கிறேன்" என்று கூறிவிட்டு நபியவர்களிடத்தில் வந்து கலிமா சொல்லி இஸ்லாத்திற்கு வந்து விட்டார்கள். ஹம்ஜா (ரலி) இஸ்லாத்தை தழுவியதால் முஸ்லிம்களுக்கு பலம் அதிகரித்துவிட்டது. அதற்கு பிறகு மூன்று நாள் கழித்து உமர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை தழுவினார்கள்.

## 10. உமர் (ரலி) இஸ்லாத்தை ஏற்குதல்

ஒருமுறை நபி (ஸல்) அவர்கள் "யா அல்லாஹ் **உமர் இப்னு கத்தாப்** அல்லது **அபூஜஹ்ல்** இவர்கள் இரண்டு பேரில் ஒருவரை முஸ்லிமாக்கி இஸ்லாத்திற்கு வலிமை சேர்ப்பாயாக!" என்று துஆச் செய்தார்கள். அல்லாஹ் உமர் (ரலி) விஷயத்தில் இந்த துஆவை ஏற்றுக் கொண்டான். மறுநாள் உமர் (ரலி) கையில் வாளை உருவிக் கொண்டு "நான் முஹம்மதின் கதையை முடித்து விடுகிறேன்" என்று கூறி வேகமாக சென்றார்கள். அவர்களை வழியில் சந்தித்த ஒரு ஸஹாபி, உமது தங்கை பாத்திமாவும், உமது மச்சானும் முஸ்லிமாக மதம் மாறிவிட்டார்களே அது உனக்கு தெரியுமா? என்று கேட்டார்கள். அது கேட்டு ஆச்சரியமான உமர் (ரலி) அவர்கள் கடும் கோபம் அடைந்து தங்கையின் வீட்டிற்கு சென்று தங்கையையும், அவர்களுடைய கணவனையும் கடுமையாக அடித்தார்கள்.

அவர்கள் தங்கை பாத்திமாவோ "நாங்கள் அல்லாஹ்வையும், ரஸூலையும் ஏற்றுக் கொண்டோம். நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். சோர்வடைந்த உமர் (ரலி) அவர்கள் அருகிலிருந்த குர்ஆனை எடுத்து ஓதினார்கள். குர்ஆனின்

ஒரு வசனம் அவர்களை ஒரு உலுக்கு உலுக்கியது. இஸ்லாத்தின் மீது ஒரு ஆர்வம் வந்தது. உடனே நபி (ஸல்) அவர்களிடம் வந்து கலிமா சொல்லி முஸ்லிமாகி விட்டார்கள். உமர் (ரலி) இஸ்லாத்திற்கு வந்த பிறகு இஸ்லாமியர்களுக்கு மிகவும் வலிமை சேர்ந்தது. முஸ்லிம்களை துன்புறுத்துவது கொஞ்சம் குறைந்தது.

## 11. நபியவர்களும், உத்பாவும்

நாளுக்கு நாள் முஸ்லிம்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே சென்றது. அதை பொறுக்க முடியாத குரைஷிகள் அவர்களின் தலைவர்களில் ஒருவராகிய உத்பா இப்னு ரபிஆவை நபியவர்களிடம் பேச்சு வார்த்தை நடத்த அனுப்பி வைத்தார்கள்.

அவர் நபியவர்களிடம் வந்து "என் சகோதரனின் மகனே! நீங்கள் கொண்டு வந்த புதிய மார்க்கத்தால் நமது சமுதாயத்தில் ஒற்றுமை குலைந்து விட்டது. எனவே நீங்கள் இந்த வேலையை விட்டுவிடுங்கள். உங்களுக்கு பணக்காரன் ஆக வேண்டும் என்ற ஆசை இருந்தால், நாங்கள் நிறைய பணம் ,காசு சேர்த்துத் தருகிறோம். அரசர் ஆக வேண்டும் என்ற ஆசை இருந்தால், நாங்கள் அரசனாக ஆக்குகிறோம். அல்லது வேறு ஏதேனும் ஜின்கள், ஷைத்தானின் சேட்டையாக இருந்தால், நாங்களே அதற்கு வைத்தியம் செய்கிறோம்" என்று கூறினார்.

இதைக் கேட்ட நபியவர்கள் எதுவும் பேசாது குர்ஆனிலிருந்து "**சூராஃபுஸ்ஸிலத்**" என்ற அத்தியாயத்தை ஓதி காண்பித்தார்கள். அதை கவனமாக கேட்ட உத்பா குரைஷிகளிடம் திரும்ப வந்து, "நிச்சயமாக இன்று இதுவரை கேட்டிராத சொற்களை நான் கேட்டேன். அது கவிதையும் அல்ல, சூனியமும் அல்ல. குரைஷிகளே! பேசாமல் இவரை விட்டுவிடுங்கள் என்று கூறினார்". ஆனால் அதை ஏற்றுக் கொள்ளாத குரைஷிகள் நபி

உங்களுக்கும் சூனியம் செய்து விட்டார் என்று கூறினார்கள்.

## 12. ஊர் தள்ளிவைக்குதல்

என்ன செய்தும் இஸ்லாமிய வளர்ச்சியை தடுக்க முடியாத குரைஷிகள் ஒன்று சேர்ந்து நபித்துவத்தின் 7ஆம் ஆண்டு ஒரு ஒப்பந்தம் செய்தார்கள். “முஸ்லிம்களையும் அவர்களுக்கு ஆதரவு தரும் பனூ ஹாஷிம் கிளையார் களையும் ஊரைவிட்டு ஒதுக்கி வைக்க வேண்டும். அவர்களுடன் எந்த கொடுக்கல், வாங்கலும் கூடாது” என்று ஒப்பந்தம் எழுதி கஃபாவின் உள்ளே தொங்க விட்டார்கள். எனவே மக்காவில் முஸ்லிம்களுக்கு யாரும் எந்த பொருளும் விற்கவில்லை. உணவு பொருட்களையும் தடை செய்து விட்டார்கள்.

அபூதாலிப் அவர்கள் தனது கிளையார்களையும், முஸ்லிம்களையும் அழைத்துக் கொண்டு அங்கிலிருந்த ஒரு மலை அடிவாரத்திற்கு சென்று விட்டார்கள். அங்கு சென்று கூடாரம் அடித்து தங்கினர். அந்த இடத்திற்கு (ஷுஃபே அபூதாலிப்) அபூதாலிபுடைய கணவாய் என்று சொல்லப்படும். அங்கே அவர்களுக்கு போதுமான உணவு கிடைக்காமல் பசியிலும், பட்டினியிலும் இருந்தார்கள். மரத்தின் இலைதழைகளை உண்டு வாழ்ந்தார்கள்.

மக்காவுக்கு வெளியே யாராவது வியாபாரக் கூட்டம் வந்தால் அவர்களிடம் உணவு பொருட்களை வாங்கி வந்தார்கள். இவ்வாறு மிகவும் சிரமமான முறையில் மூன்று வருடங்கள் ஓடியது. அப்பொழுது மக்காவில் வாழ்ந்த சில நீதமான மனிதர்கள் இந்த அநீதியை எதிர்த்து குரல் கொடுக்க ஆரம்பித்தனர். இந்த ஒப்பந்தத்தை கிழித்து எறிய வேண்டும் எனப் பேசிக் கொண்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். “இந்த ஒப்பந்தத்தில் எழுதப்பட்ட **“பிஸ்மிகல்லாஹும்ம”** என்ற பெயரை தவிர

மற்றவைகளை கரையான் சாப்பிட்டுவிட்டது". அதைக் கேட்ட மக்கள் கஃபாவை திறந்து பார்த்த போது பிஸ்மிகல்லாஹும்ம என்ற எழுத்தைத் தவிர மற்ற அனைத்தையும் கரையான் அரித்து விட்டது. இதைப் பார்த்து அனைவரும் ஆச்சசரியப்பட்டார்கள். அத்தோடு அந்த ஒப்பந்தம் முடிவுக்கு வந்தது.

நபித்துவம் பெற்ற பத்தாவது ஆண்டில் அபூதாலிப் அவர்களும் அன்னை கதீஜா (ரலி) அவர்களும் அடுத்தடுத்து மரணம் ஆனார்கள். அபூதாலிப் அவர்களுடைய மரணத் திற்கு பின்பு மக்காவாசிகள் நபி (ஸல்) அவர்களுக்கும், முஸ்லிம்களுக்கும் பல மடங்கு கொடுமை செய்ய ஆரம்பித்தனர். எனினும் முஸ்லிம்கள் மிகவும் மன உறுதியோடு இஸ்லாத்தை பின்பற்றி வந்தார்கள். **(படம் - 30)**

## 13. தாயிப் பயணம்

மக்காவிலிருந்து சுமார்100 கி.மீ தொலைவில் '**தாயிப்**' என்ற ஒரு நகரம் இருக்கிறது. நபி (ஸல்) அவர்கள் அந்த ஊர்வாசிகளுக்கு இஸ்லாத்தை எடுத்துரைப்பதற்காக தனது அடிமையான ஜைது பின் ஹாரிஸா (ரலி) அவர்களை உடன் அழைத்துக் கொண்டு நடைபயணமாக சென்றார்கள். அங்கே சென்று பத்து நாட்கள் தங்கியிருந்து முக்கியத் தலைவர்களையும், மற்றவர்களையும் இஸ்லாத்தின் பக்கம் அழைத்தார்கள்.

அந்த ஊர்வாசிகள் யாரும் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. அனைவரும் கூடி நபியவர்களை ஏசியும், பழித்தும் ஊரை விட்டு துரத்தினார்கள். சிறுவர்களையும், அடிமைகளையும் ஏவிவிட்டு நபியவர்களை நோக்கி கல் வீசினார்கள். நபியவர்களின் புனித மேனியில் இரத்தம் கசிந்தது. ஜைது (ரலி) அவர்களுக்கும் தலையில் பலத்த அடி பட்டது. அவர்களிடமிருந்து தப்பித்து அருகிலிருந்த திராட்சை தோட்டத்திற்குள் நுழைந்து அமர்ந்து

கொண்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் அழுத வண்ணமாக அல்லாஹ்விடத்தில் துஆ செய்தார்கள். அந்த துஆவின் சுருக்கம் "எனது இறைவா! எனது பலகீனத்தையும், திறமையின்மையையும் மக்களிடம் மதிப்பில்லாத நிலை -யையும் உன்னிடத்தில் முறையிடுகிறேன். கருணையாள -னுக்கெல்லாம் கருணையாளனே! பலகீனமான -வர்களையும் காப்பாற்றுபவனே நீயே! எனது ரப்பாக இருக்கிறாய். என்னை வெறுக்கும் பகைவர்களிடம் எனது காரியத்தை ஒப்படைத்து விடாதே! இறைவா! நீ என் மேல் கோபமின்றி திருப்தியாக இருந்தால் நான் எந்த சிரமங்களையும் பொருட்படுத்தமாட்டேன். இறைவா! நீ வழங்கும் சுகத்தை நான் எதிர்பார்க்கிறேன். இறைவா! உனது திருமுகத்தின் பிரகாசத்தால் இருள்களெல்லாம் ஒளி பெற்றன. இம்மை, மறுமையின் காரியங்கள் சீர் பெற்றன. அந்த ஒளியின் பொருட்டால் உனது கோபம் என் மேல் இறங்குவதை விட்டும் நான் பாதுகாப்புத் தேடுகிறேன். இறைவா! நீ என்னை முழுமையாக பொருந்திக் கொள்ளும் வரை உன் பொருத்தத்தை தேடுகிறேன். நன்மை செய்யவும், பாவத்திலிருந்து விலகவும் உன் அருளில்லாமல் முடியாது" என்று அல்லாஹ்விடத்தில் பிரார்த்தித்தார்கள். **(படம் - 27)**

பெருமானாரின் நிலையைப் பார்த்த அந்த தோட்டத்தின் உரிமையாளர் தனது அடிமையின் மூலம் திராட்சைப் பழங்களைக் கொடுத்து அனுப்பினார். அந்த அடிமையிடம் அவரைப்பற்றி நபி (ஸல்) விசாரித்தார்கள். அதற்கு அவர், "என் பெயர் **அத்தாஸ்**. நான் ஒரு கிறிஸ்துவன். எனது ஊர் **நீனவா**" என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் **யூனுஸ்இப்னுமதா**வுடைய ஊரைச் சார்ந்தவரா?" என்று கேட்டார்கள். மிகவும் ஆச்சரியப்பட்ட அவர், "ஆமாம் யூனுஸ் இப்னு மதா என்பவரைப் பற்றி உங்களுக்கு எப்படி தெரியும்" என்று கேட்டார்." அவரும் அல்லாஹ்வுடைய நபி, நானும்

அல்லாஹ்வுடைய நபி” என்று கூறினார்கள்.

உடனே அந்த அடிமை முஸ்லிமாகிவிட்டார்.

தாயிபிலிருந்து வெளியேறி மக்கள் திரும்பும் வழியில் ‘**கர்னுல் மனாஜில்**’ என்ற இடத்தில் நபி (ஸல்) அவர்கள் சிறிது நேரம் தங்கினார்கள். அப்போது அல்லாஹுத்தஆலா ஜிப்ரயீல் (அலை) அவர்களையும், மலைகளுடைய மலக்குகளையும் அனுப்பி வைத்தான். இரண்டு மலைகளுக்கு நடுவில் இருக்கும் தாயிஃப் ஊரை இரு மலைகளையும் சேர்த்து நசுக்கி விடவா? என அனுமதி கேட்டார்கள்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள் “இவர்கள் ஈமானை ஏற்காவிட்டாலும், இவர்களின் பிள்ளைகளாவது ஏற்றுக் கொள்வார்கள். ஆகவே இவர்களை அழித்து விட வேண்டாம்” என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் இந்த உம்மத்தின் மீது அளவற்ற கருணையும், அன்பும் கொண்டவர்களாக இருந்தார்கள். **(படம் - 28)**

பின் அங்கிருந்து கிளம்பி மக்கா வரும் வழியில் **நஹ்லா** என்ற இடத்தில் தங்கினார்கள். அப்போது **ஜின்கள்** நபி (ஸல்) அவர்களிடம் கூட்டம் கூட்டமாக வந்து இஸ்லாத்தை ஏற்று குர்ஆனையும் கேட்டு சென்றார்கள். **(படம் - 32)**

மக்கா திரும்பிய நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு குடும்பத்தார்களையும், கிளையார்களையும் இஸ்லாத்தின் பக்கம் அழைத்தார்கள். வீடு வீடாகச் சென்று அல்லாஹ்வின் கட்டளைகளைக் கூறினார்கள். வெளி ஊர்களிலிருந்து மக்காவிற்கு வரக்கூடிய பயணிகளிடத்தில் இஸ்லாத்தை பற்றி எடுத்துரைத்தார்கள். அவர்களில் ஒன்று இரண்ட பேர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

ஒவ்வொரு ஊர்வாசிகள் இடத்திலும் “நீங்கள் இஸ்லாத்திற்கு வந்து விடுங்கள். மக்காவாசிகள் மிகவும்

கொடுமை செய்கிறார்கள். எனவே என்னை உங்கள் ஊருக்கு அழைத்து சென்று பாதுகாப்புக் கொடுங்கள்" என்று கேட்டுக் கொண்டார்கள். ஆனால் யாரும் பொறுப் பேற்றுக் கொள்ளவில்லை. அப்போது **மதீனா**விலிருந்து ஆறுபேர் கொண்ட ஒரு குழுவினர்கள் வந்திருந்தார்கள். அவர்களுக்கு இஸ்லாத்தை நபி (ஸல்) அவர்கள் அறிமுகம் செய்தார்கள். உடனே அந்த ஆறு பேரும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் மதீனாவிற்கு சென்று மற்றவர்களுக்கும் இஸ்லாத்தைப் பற்றி எடுத்துரைத்தார் கள். இது நபித்துவத்தின் பதினோராம் ஆண்டு நிகழ்ந்தது.

## 14. மிஃராஜ் பயணம்

நபிப்பட்டம் பெற்ற 12ஆவது வருடம் ரஜப் மாதம் பிறை 27 அன்று நபி (ஸல்) அவர்களுடைய **மிஃராஜ்** பயணம் நிகழ்ந்தது. மஸ்ஜிதில் ஹராமாகிய கஃபதுல்லாஹ் விலிருந்து பலஸ்தீன் நாட்டிலுள்ள **பைத்துல் முகத்தஸ்** என்னும் பள்ளிக்கு நபி (ஸல்) சென்றார்கள். '**புராக்**' என்னும் வாகனத்தில் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அழைத்து சென்றார்கள். அங்கே அனைத்து நபிமார்களுக்கும் இமாமாக நின்று தொழ வைத்தார்கள். **(படம் - 31)**

பின்னர் 'புராக்' மூலமாக ஒவ்வொரு வானமாக கடந்து ஏழு வானங்களையும் தாண்டி 'ஸித்ரத்துல் முன்தஹா' என்ற இடத்திற்கு சென்றார்கள். ஜிப்ரயீல் (அலை) சொர்க்கம், நரகம் அனைத்திற்கும் அழைத்துச் சென்று காட்டினார்கள். பின்பு 'அர்ஸுக்கு' சென்றார்கள். அங்கு அல்லாஹ் அவர் -களுக்கு திருக்காட்சி வழங்கினான். தன் கண்களைக் கொண்டு நேரடியாக அல்லாஹ்வைப் பார்த்தார்கள், பேசினார்கள்.

அல்லாஹ் அவர்களுக்கு 50 நேரத் தொழுகையை அன்பளிப்பாக வழங்கினான். திரும்பி வரும் போது ஆறாவது வானத்திலே இருந்த மூஸா (அலை) அவர்கள்

“இவ்வளவு தொழுகையை தொழுவதற்கு உங்கள் உம்மத் சக்தி பெற மாட்டார்கள். ஆகவே கொஞ்சம் குறைத்துக் கொள்ளும்படி அல்லாஹ்விடம் சொல்லுங்கள்” என்று கூறி திருப்பி அனுப்பினார்கள். அல்லாஹுத்தஅலா 50 நேரத்தில் 5 நேரத் தொழுகையை குறைத்து அனுப்பினான். மீண்டும் மூஸா (அலை) அவர்கள் இன்னும் குறைத்துக் கொண்டு வரும்படி கூறினார்கள். அல்லாஹ் இன்னும் 5 நேர தொழுகையை குறைத்துக் கொண்டான். இவ்வாறே மீண்டும் மீண்டும் நடந்தது. இறுதியாக அல்லாஹுதஆலா 5நேர தொழுகையை மட்டும் இந்த உம்மத்துக்கு கடமை யாக்கினான். அதை முறைப்படி தொழுதால் 50நேரத் தொழுகையின் நன்மைகளை தருவதாக கூறினான்.

மிஃராஜுடைய பயணம் இரவில் ஒருபகுதியில் நடைபெற்றது. காலையில் நபி (ஸல்) அவர்கள் இதை மக்களுக்கு அறிவித்தார்கள். இதை கேட்ட மக்காவாசிகள், “ஒரே இரவில் அங்கெல்லாம் செல்லமுடியுமா? இது பொய்” என்று கூறினார்கள்.

சிலரோ அங்கு சென்றது உண்மையெனில் பைத்துல் முகத்தஸ் உடைய அடையாளங்களை கூறுங்கள் என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் அதன் அடையாளங் களை அப்படியே சொல்லிக் காண்பித்தார்கள். தாங்கள் செல்லும் வழியில் பார்த்த வியாபாரக் கூட்டத்தைப் பற்றியும் கூறினார்கள். அதுவெல்லாம் அப்படியே உண்மையாக இருந்தன. அதைக் கேட்ட மக்கள் ஆச்சரியப்பட்டனர். எனினும் மக்கா குரைஷிகள் இஸ்லாத்தை ஏற்கவில்லை.

## 15. அகபா ஒப்பந்தம்

மதீனாவை சார்ந்த ஆறு நபர்கள் நுபுவத்தின் 11ஆம் ஆண்டில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு மதீனா சென்றார்கள். அதற்கு அடுத்த வருடம் 12 நபர்கள் வந்து

இஸ்லாத்தை ஏற்று மினாவிலுள்ள **அகபா** என்ற இடத்தில் ஒப்பந்தம் செய்தார்கள். “திருட்டு, விபச்சாரம், கொலை போன்ற பாவங்கள் செய்யக்கூடாது. அல்லாஹ், ரஸூலுக்கு கட்டுப்பட்டு வாழவேண்டும்” என்பது போன்ற விஷயங்களை வாக்குறுதி கொடுத்தார்கள். அவர்கள் மதீனா திரும்பும் போது **முஸ்அப் இப்னு உமைர்** (ரலி) என்ற ஸஹாபியையும் அவர்களுடன் அனுப்பி வைத்தார்கள். அங்கே சென்று அவர்கள் மக்களுக்கு இஸ்லாத்தைப் பற்றி எடுத்துச் சொன்னார்கள். மதீனா மக்கள் கூட்டம் கூட்டமாக இஸ்லாத்தில் நுழைந்தார்கள். **(படம் - 62)**

நபித்துவத்தின் 13ஆவது ஆண்டு ஹஜ்ஜுடைய காலத்தில் சுமார் 73 பேர்கள் மதீனாவிலிருந்து வந்து நபியவர்களிடம் ஒப்பந்தம் செய்தார்கள். நபி (ஸல்) அவர்களை அந்த மக்கள் தங்களின் ஊருக்கு அழைத்தார்கள். எவ்வளவு எதிர்ப்புகள் வந்தாலும் நபியவர்களைப் பாதுகாப்போம் என்று வாக்குறுதி கொடுத்தார்கள். அதன் பின் நபி (ஸல்) அவர்கள் மக்காவில் வாழ்ந்த முஸ்லிம்களை மதீனாவிற்குச் செல்ல அனுமதி கொடுத்தார்கள்.

## 16. ஹிஜ்ரத்

நபி (ஸல்) அவர்கள் மக்காவில் கடுமையான சிரமங்களுக்கு மத்தியில் வாழ்ந்த முஸ்லிம்களுக்கு மதீனா செல்ல அனுமதி கொடுத்தவுடன் ஒவ்வொருவராக மதீனாவை நோக்கிச் செல்ல ஆரம்பித்தார்கள்.

தாங்கள் வாழ்ந்த நாட்டை, தங்கள் வீடு, தோட்டம், சொத்துகளையெல்லாம் விட்டுவிட்டு மார்க்கப்படி வாழ வேண்டும் என்பதற்காக ஊரை விட்டு வெளியேறுவதற்கு ‘**ஹிஜ்ரத்**’ எனப்படும்.

மக்காவாசிகள் முஸ்லிம்கள் தங்களை விட்டுத் தப்பிச் சென்றால், மதீனாவில் ஒன்று கூடி நமக்கு எதிராக

நடவடிக்கை எடுக்க வாய்ப்புண்டு என்று நினைத்து முஸ்லிம்கள் ஹிஜ்ரத் செய்வதை தடுத்தார்கள். சிலர்களை வெளியே விடாமல் அடைத்து வைத்தார்கள். சிலரை சங்கிலியால் கட்டி வைத்தார்கள். சிலருடைய மனைவி, மக்களையெல்லாம் சிறை வைத்தார்கள். இவ்வாறு கடும் தொல்லைகள் கொடுத்தார்கள். இருந்தாலும் எல்லா சிரமங்களையும் தாங்கிக் கொண்டு 500 கி.மீ தொலைவில் இருக்கும் மதீனாவை நோக்கி நபித்தோழர்கள் சென்றார்கள். பயணம் செய்ய முடியாத வயோதிகர்கள், பலகீனமானவர்கள், பெண்கள், குழந்தைகள், மற்றும் சிலர் மக்காவில் தங்கி இருந்தார்கள்.

முஸ்லீம்கள் மதீனாவில் ஒன்று திரண்டால் மக்காவின் மீது போர் தொடுக்கலாம் அல்லது மக்காவின் வியாபாரக் கூட்டங்களை அந்த வழியே செல்லாமல் தடுக்கலாம் என்று மக்காவாசிகள் பயந்து '**தாருன்நத்வா**' என்னும் இடத்தில் ஒன்று கூடி ஆலோசனை செய்தார்கள். இறுதியாக நபி (ஸல்) அவர்களை கொலை செய்ய வேண்டும் என முடிவு செய்தார்கள். அதற்காக ஒவ்வொரு கூட்டத்திலிருந்தும் ஒரு வாலிபர் வரவேண்டும். அனைவரும் சேர்ந்து நபியை கொன்று விட்டால் தனியாக யாரும் ஒரு நபரை குறை சொல்லமுடியாது. நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தார் ஆகிய அப்துல் மனாப் கிளையார்கள் எல்லா கிளையார் களிடத்திலும் சண்டையிடமுடியாது என்று அவர்கள் முடிவு செய்தார்கள்.

தாங்கள் எடுத்த முடிவின்படி அன்று இரவு சுமார் 11 நபர்கள் வாளை உருவியவர்களாக நபி (ஸல்) அவர்களின் வீட்டை சுற்றி இருட்டில் மறைந்து நின்று கொண்டிருந் தார்கள். பின்னிரவில் நபி (ஸல்) அவர்கள் தன் வீட்டை விட்டு வெளியேறி பள்ளிக்கு செல்லும் நேரத்தில் அனை வரும் ஒரே நேரத்தில் பாய்ந்து நபி (ஸல்) அவர்களை கொன்று விட வேண்டும் என திட்டமிட்டார்கள்.

அப்போது அல்லாஹுதஆலா நபியவர்களை மதீனாவிற்கு செல்லும்படி உத்தரவிட்டான்.

நபி (ஸல்) தங்கள் படுக்கையில் அலி (ரலி) அவர்களை படுக்கச் சொன்னார்கள். தங்களுடைய போர்வையை அவர்களை போர்த்திக் கொள்ளச் சொன்னார்கள். காலையில் இந்த இந்த நபர்களுக்கு தரவேண்டிய அமானித பொருட்களை தந்து விட்டு மதீனாவிற்கு வரவேண்டும் என்றும் எந்த ஆபத்துமின்றி அல்லாஹ் உங்களைப் பாதுகாப்பான் என்றும் கூறினார்கள். வீட்டை விட்டு வெளியேறிய நபி (ஸல்) அவர்கள் கையில் ஒரு கைப்பிடி மண்ணை எடுத்து, “நாம் அவர்களுக்கு முன்புறம் ஒரு சுவரும், பின்புறம் ஒரு சுவரும் ஆக்கிவிட்டோம். இன்னும் அவர்களை சூழ்ந்துக் கொண்டோம். அவர்கள் எதையும் பார்க்க முடியாது” என்ற ஆயத்தை ஓதி ஊதினார்கள். அது அங்கிருந்த அத்தனை பேர் கண்களிலும் பட்டது. நபி (ஸல்) அவர்கள் நடந்து அபூபக்கர் (ரலி) அவர்கள் வீட்டிற்கு சென்றார்கள்.

பிறகு இருவரும் கிளம்பி மக்காவிலிருந்து வெளியேறி அருகிலிருந்த “**ஸவ்ர்**” என்னும் மலைக்குகையில் ஒளிந்துக் கொண்டார்கள். இது நடந்தது நபித்துவத்தின் 14ஆம் ஆண்டு சபர் பிறை 27 கி.பி 622 செப்டம்பர் 12 ஆகும். **(படம் - 33, 34)**

பின்னிரவில் எதிரிகள் கதவின் இடுக்கின் வழியாக பார்த்தார்கள். அங்கிருந்த அலி (ரலி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் தான் என்று எண்ணிக் கொண்டார்கள். நபியவர்கள் எழுந்திருக்க வில்லை என்று காத்திருந்தார்கள்.

நீண்ட நேரத்திற்குப் பின் அங்கு வந்த ஒரு நபர் நபி (ஸல்) அவர்கள் வெளியே சென்றதை நான் பார்த்தேன் என்றார். அதைக்கேட்டு ஆவேசமாக உள்ளே நுழைந்த அவர்கள் போர்வையை விலக்கிப் பார்த்த போது, அங்கே அலி (ரலி) அவர்கள் இருப்பதைக் கண்டார்கள். மிகவும் ஏமாற்றம்

அடைந்த மக்கள் எப்படியும் மதீனா செல்வதற்குள் நபி (ஸல்) அவர்களை பிடித்து விடவேண்டும் என்று உறுதி கொண்டார்கள். எனவே எல்லா பக்கங்களிலும் ஆள் அனுப்பி தேடினார்கள்.

அப்படி தேடிக் கொண்டு சென்ற சிலர் நபி (ஸல்) அவர்கள் இருக்கும் குகை வாயில் அருகே வந்துவிட்டார்கள். அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் பயந்த போது "**கவலைப் படாதீர்கள் அல்லாஹ் நம்மோடு இருக்கிறான்**" என்று நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள். அந்த குகையின் வாயிலை ஒரு சிலந்திப்பூச்சி கூடுகட்டி மறைத்தது. வாசல் அருகே இரண்டு புறாக்கள் முட்டையிட்டு குஞ்சு பொறித்தன. அதைப் பார்தத எதிரிகள் இதற்குள் யாரும் சென்றிருக்க முடியாது என்று எண்ணி திரும்பி விட்டார்கள். இவ்வாறு அல்லாஹ் நபியவர்களைக் காப்பாற்றினான்.

மூன்று நாட்கள் குகையில் தங்கிவிட்டு நபியவர்கள் மதீனாவை நோக்கிக் கிளம்பினார்கள். நபியவர்களை பிடித்துக் கொண்டு வந்தால் 100 ஒட்டகை தருவதாக குரைஷிகள் அறிவித்தார்கள். அதற்காகப் பலரும் நபியவர்களை தேடித் திரிந்தார்கள்.

## 17. சுராகா

நபியவர்களைத் தேடி அலைந்தவர்களில் **சுராகாவும்** ஒருவர். அவர் நபி (ஸல்) அவர்கள் செல்லும் பாதையில் அவர்களை பின்தொடர்ந்தார். தனது ஈட்டி அம்புகளோடு தனது குதிரையில் ஏறி வேகமாக சென்ற அவர் நபியவர்களை நெருங்கினார். அப்போது அவரது குதிரையின் கால் தடுமாறி கீழே விழுந்தது. அவரும் தூக்கி எறியப்பட்டார். தான் செய்யும் காரியம் தவறு தன்னை இறைவன் தான் தடுக்கிறான் என்று உணர்ந்தார் என்றாலும் 100 ஒட்டகங்களின் ஆசை அவரை விடவில்லை. எனவே சுதாரித்துக் கொண்டு குதிரையில் ஏறி இன்னும் நெருங்கி

வந்தார். அப்போது மீண்டும் குதிரை இடறி விழுந்தது. முழங்கால் வரை அதன் கால்கள் மண்ணில் புதைந்தது. முன்பை விட அதிகமாக காயம் ஏற்பட்டது. எனினும் மீண்டும் அவர் தொடர்ந்தார். மூன்றாவது முறையும் குதிரை விழுந்தது.

இப்போது நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வால் பாதுகாக்கப்பட்ட இறைத்தூதர் என்பதை விளங்கிக் கொண்டார். சுராகா தன் பாவங்களை விட்டும் திருந்தி நபியவர்களிடத்தில் மன்னிப்பு கேட்டுக் கொண்டார். இந்த வழியில் யாரும் நபியை பின்தொடராது நான் பார்த்துக் கொள்கிறேன் என்று வாக்களித்தார். எனவே நபி (ஸல்) அவர்கள் அவருக்காக துஆ செய்தார்கள். மேலும் **கிஸ்ரா** என்ற மன்னனின் கையில் அணிந்திருக்கும் தங்க வளையங்கள் உமது கையில் அணிவிக்கப்படும் என்று துஆச்செய்தார்கள்.

பிற்காலத்தில் அவர் இஸ்லாத்திற்கு வந்து விட்டார். உமர் (ரலி) அவர்களின் காலத்தில் கிஸ்ரா மன்னரின் கோட்டை -களைக் கைப்பற்றி அங்கிருந்த செல்வங்களை மதீனாவுக்கு கொண்டு வரப்பட்டது. அப்போது அதிலிருந்த மன்னரின் தங்க காப்புக்களை எடுத்து சுராகா (ரலி) அவர்களின் கைகளில் அணிவிக்கப்பட்டது. இவ்வாறாக நபி (ஸல்) அவர்களுடைய துஆ நிகழ்ந்தது.

நபி (ஸல்) அவர்கள் பயணத்தை தொடர்ந்தார்கள். வழியில் **உம்மு மஅபத்** என்ற பெண்ணுடைய கூடாரம் இருந்தது. அவரிடத்தில் சென்று "ஏதேனும் சாப்பிடும் பொருள் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். அதற்கு அந்தப் பெண் "இந்த ஆட்டைத் தவிர வேறொன்றும் இல்லை. இந்த ஆடும் பஞ்சத்தினால் பால் வற்றிப் போய் விட்டது" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் அந்த ஆட்டுக்கு துஆ செய்து அதிலிருந்து பாலைக் கறந்தார்கள். அதை அங்கிருந்த அனை

-வரும் குடித்தார்கள். அந்த பெண்ணுக்கும் கொடுத்தார்கள். மீண்டும் பாத்திரம் நிறைய பால் கறந்து அதை அந்த பெண்ணிடம் கொடுத்து விட்டு சென்றார்கள். சற்று நேரத்தில் அந்த பெண்ணின் கணவர் வந்த போது நடந்த செய்திகளையெல்லாம் அவரிடம் விரிவாக எடுத்துரைத் -தாள் அந்த பெண்! பெருமானாரின் குணங்களையும், நடை,உடைகளையும் வர்ணித்துக் கூறினார்.

## 18. குபாவில் தங்குதல்

இவ்வாறு மக்காவிலிருந்து வழக்கமான பாதையில் வராமல் மாற்று பாதையில் நபி (ஸல்) அவர்கள் மதீனாவை நோக்கிச் சென்றார்கள். பத்து நாட்கள் பயணத்திற்குப் பின்பு நபி (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு அருகிலிருந்த ‘குபா’ என்னும் இடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே நான்கு நாட்கள் தங்கினார்கள். மக்காவிலிருந்து அலி (ரலி) அவர்களும் ‘குபா’ விற்கு வந்து சேர்ந்து விட்டார்கள். குபாவிலே நபி (ஸல்) அவர்கள் ஒரு பள்ளிவாசல் அமைத்து தொழவைத்தார்கள். அது தான் முதல் பள்ளிவாசல் ஆகும். பின்பு குபாவிலிருந்து கிளம்பி மதீனாவை நோக்கி பெருமானார் (ஸல்) அவர்கள் சென்ற போது வழியில் ஜும்மாவிற்குரிய நேரம் ஆகிவிட்டதால், அங்கே ஜும்மா தொழுகை தொழ வைத்தார்கள். அந்த இடத்தில் தற்சமயம் பெரிய மஸ்ஜித் கட்டப்பட்டுள்ளது. **(படம் - 35, 36)**

பகுதி – 5

# நபி (ஸல்) அவர்களின் மதீனா வாழ்க்கை

## 1. மதீனாவில் நபி (ஸல்)

பெருமானாரின் வருகையை எதிர்நோக்கி மதீனாவாசிகள் ஒவ்வொரு நாளும் வெளியே வந்து காத்திருந்தார்கள். மலைகளிலும், குன்று -களிலும் ஏறி நபி (ஸல்) அவர்கள் வருகிறார்களா? என்று தினந்தோறும் பார்ப்பார்கள். அப்போது பெருமானார் மதீனாவிற்கு வரக்கூடிய காட்சியை ஒருவர் கண்டு சப்த -மிட்டு கூற மொத்த மதீனாவும் திரண்டு வந்து நபி (ஸல்) அவர்களை வரவேற்றார்கள். எங்கு பார்த்தாலும் மகிழ்ச்சி -யின் கூக்குரலே கேட்டது.

**“தல அல்பத்ரு அலைனா**

**மின்ஸனிய்யா தில் வதா”**

என்ற பாடலைப் படித்து “இதோ முழு நிலவு எங்களுக்கும் உதயமாகி விட்டது” என்று கூறி மகிழ்வடைந் தார்கள். மதீனாவாசிகள் ஒவ்வொருவரும் நபி (ஸல்) அவர்கள் தங்கள் வீட்டில் தங்க வேண்டும் என்று போட்டிப் போட்டுக் கொண்டார்கள். பெருமானார் (ஸல்) அவர்கள் “எனது இந்த ஒட்டகை அல்லாஹ்விடமிருந்து உத்தரவை பெற்றுள்ளது. அதற்கு வழிவிடுங்கள். அது எங்கே சென்று

அமர்கிறதோ அதுவே என் தங்குமிடம்" என்று கூறினார்கள்.

ஒவ்வொரு இடமாக கடந்து சென்ற நபியவர்களின் ஒட்டகம் இறுதியாக நஜ்ஜார் கூட்டத்திற்குச் சொந்தமான ஒரு இடத்திற்கு போய் அமர்ந்து விட்டது. எனவே நபி (ஸல்) அவர்கள் அங்கிருந்த **அபூ அய்யூப் அன்சாரி** (ரலி) என்ற ஸஹாபியின் வீட்டில் தங்கினார்கள். அபூ அய்யூப் அன்சாரி (ரலி) அவர்கள் மிகவும் அன்புடனும், கண்ணியத்துடனும், பணிவுடனும் அவர்களை கவனித்துக் கொண்டார்கள்.

ஒட்டகம் சென்று அமர்ந்த இடம் நஜ்ஜார் கிளையைச் சார்ந்த இரண்டு அநாதை சிறுவர்களுக்கு சொந்தமானது. அந்த இடத்தில் நபி (ஸல்) அவர்கள் மஸ்ஜித் கட்ட நினைத்தார்கள். அவ்விரண்டு சிறுவர்களும் அந்த இடத்தை அன்பளிப்பாக தர முன் வந்தார்கள். ஆனால் நபி (ஸல்) அவர்கள் அதற்குரிய விலையைக் கொடுத்து அதை வாங்கி மஸ்ஜித் கட்டினார்கள். மஸ்ஜித் கட்டும் வேலையில் நபி (ஸல்) அவர்களும் ஈடுபட்டு கல்லையும், மண்ணையும் சுமந்தார்கள். **(படம் - 37)**

"இறைவா! வாழ்க்கை என்பதே மறுமை வாழ்க்கைதான். அன்சாரிகளையும், முஹாஜிர்களையும் நீ மன்னிப்பாயாக!" என்ற கவிதையைச் சொல்லிக் கொண்டே நபியவர்களும், மற்றவர்களும் வேலை செய்தார்கள்.

பள்ளி உடைய சுவர்கள் கல்லாலும், மண்ணாலும் தூண்கள் பேரிச்சமரக் கட்டைகளாலும், கூரை பேரிச்சங் கீற்றுகளாலும் கட்டப்பட்டது. தரையில் மணல் கொட்டி சமப்படுத்தப் பட்டது. பள்ளியை ஒட்டி நபி (ஸல்) அவர்களின் மனைவிமார்களின் வீடுகள் கட்டப்பட்டன. மக்காவிலிருந்து பெரும்பாலான முஸ்லிம்கள் இடம் பெயர்ந்து மதீனா வந்து சேர்ந்தனர். மதீனாவாழ் மக்கள் அனைவரும் இஸ்லாத்தில் நுழைந்து விட்டனர்.

# உ. சகோதர ஒப்பந்தம்

நபி (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து வந்த **முஹாஜிர்கள்** மற்றும் மதீனாவாசிகளான **அன்சாரி**களுக்கு மத்தியில் சகோதர ஒப்பந்தம் செய்து வைத்தார்கள். ஒவ்வொரு அன்சாரியும் ஒரு முஹாஜிரை சகோதரராக, நண்பராக ஏற்றுக் கொண்டார். அதன்படி அவரை தங்கள் இல்லங்களில் தங்கவைத்துக் கொண்டார்கள். தங்கள் வியாபாரம் மற்றும் விவசாயங்களில் அவர்களை பங்குதாரர்களாக ஆக்கிக் கொண்டார்கள். இவ்வாறு மக்காவில் சொத்து பத்துக்கள் அனைத்தையும் இழந்து இஸ்லாத்திற்காக நாடு துறந்து வந்த முஹாஜிர்களை அன்சாரிகள் இருகரம் நீட்டி வரவேற்றார்கள். போட்டி போட்டுக் கொண்டு தங்களது இல்லங்களுக்கு அழைத்துச் சென்றார்கள். தங்கள் சொந்த சகோதரர்களை விட மேலாக அவர்களை அரவணைத் -தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் முஹாஜிர்களுக்கும், அன்சாரிகளுக்கும் மத்தியில் ஒரு உடன்படிக்கை பத்திரம் எழுதி கொடுத்தார்கள். அதில் இரு கூட்டத்தார்களும் ஒற்றுமையாக வாழ வேண்டும். ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ள வேண்டும். வரம்பு மீறக் கூடியவரை எல்லோரும் சேர்ந்து எதிர்க்க வேண்டும். அவர்களுக்கு மத்தியில் ஏதாவது கருத்து வேறுபாடு ஏற்பட்டால் அதற்கான தீர்ப்பை அல்லாஹ்விடமும், ரசூலிடமும் ஒப்படைத்து விட வேண்டும் என்று எழுதிக் கொடுத்தார்கள்.

மதீனாவின் அருகில் யூதர்கள் மூன்று கூட்டங்கள் கோட்டைக் கட்டி வசித்து வந்தார்கள். **1. பனூகைனுகா, 2. பனூநுலைர், 3. பனு குரைலா** இம்மூவரும் மதீனாவின் கடைத்தெருக்களில் வியாபாரம் செய்து வந்தார்கள். சுற்று வட்டாரங்களில் விவசாயம் செய்து வந்தார்கள். ரோம்

நாட்டைச் சார்ந்த அந்த யூதர்கள் இறுதி நபி முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவில் வாழ்வார்கள் என்று அவர்களின் வேதங்களில் படித்து அவர்களோடு சேர்ந்து கொள்ள வேண்டும் என்ற ஆசையால் பல வருடங்களுக்கு முன்பே குடியேறினார்கள்.

தங்களுடைய யூத இனத்தில்தான் இறுதி நபி வருவார்கள் என்று நம்பினார்கள். காரணம் **இப்ராஹீம்** (அலை) அவர்களுக்குப் பின்னர் அவர்களின் மகனான **இஸ்ஹாக்** (அலை) அவர்களின் மூலம்தான் பல்லாயிரம் நபிமார்கள் வந்தார்கள். இன்னொரு மகனான **இஸ்மாயீல்** (அலை) அவர்கள் வம்சத்தில் 3500 வருடங்களாக எந்த நபியும் வரவில்லை.

யஹூதிகள் மதீனாவாசிகளிடம் எங்கள் இனத்தில் தான் இறுதி நபி முஹம்மது (ஸல்) அவர்கள் வர இருக்கிறார்கள். நாங்கள் அவர்களோடு சேர்ந்து உங்களையெல்லாம் வென்று விடுவோம். முழு உலகமும் எங்கள் கையில் வந்து விடும் என்றெல்லாம் பெருமை பேசிக் கொண்டார்கள். ஆனால் அல்லாஹுத் தஆலா இஸ்மாயீல் (அலை) அவர்கள் வம்சத்தில் முஹம்மது நபி (ஸல்) அவர்களை பிறக்கச் செய்தான். தங்கள் இனத்தில் பிறக்கவில்லையே என்ற பொறாமையில் யூதர்கள் நபியை எதிர்த்தார்கள். அவர்களின் வேதங்களில் கூறப்படுள்ள அடையாளங்களை வைத்து இவர் அல்லாஹ்வுடைய நபி என்று தெளிவாக அறிந்திருந் -தார்கள். எனினும் அவர்கள் ஈமான் கொள்ள முன் வரவில்லை.

நபி (ஸல்) அவர்கள் யஹூதிகளையும் இஸ்லாத்தின் பக்கம் அழைத்தார்கள். **சல்மான் பார்ஸி** (ரலி), **அப்துல்லாஹ் இப்னு சலாம்** (ரலி) போன்ற சிலரைத் தவிர வேறு யாரும் ஈமான் கொள்ளவில்லை.

## 3. யூதர்களுடன் ஒப்பந்தம்

இந்த யூதர்களிடத்திலும் நபி (ஸல்) அவர்கள் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். அதன் முக்கிய விஷயங்கள்.

1. ஒவ்வொருவருக்கும் முழுமையான மத சுதந்திரம் உண்டு.

2. முஸ்லிம்களும். யூதர்களும் ஒருவருக்கொருவர் நேர்மையோடு உதவி செய்து கொள்ள வேண்டும்.

3. எதிரிகள் மதீனாவின் மீது படையெடுத்தால் இருவரும் சேர்ந்து எதிர்க்க வேண்டும்.

4. அநீதி இழைக்கப் பட்டவர்களுக்கு உதவி செய்ய வேண்டும்.

5. குற்றவாளிகள் யாராக இருந்தாலும் அவர்களை தண்டிக்க வேண்டும்.

6. தங்களுக்கு மத்தியில் பிரச்சனை ஏற்பட்டால் அதன் முடிவை அல்லாஹ், ரசூலிடம் ஒப்படைத்து விட வேண்டும் என்று ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்.

## 4. முனாஃபிகீன்கள்

நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வருவதற்கு முன்பு **அப்துல்லாஹ் இப்னு உபை இப்னு சலூல்** என்பவரை மதீனாவின் தலைவராக ஆக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத் செய்து மதீனா வந்து விட்டதால் மக்கள் அனைவரும் முஸ்லிமாகி நபியவர்களையே தலைவராக ஏற்றுக் கொண்டார்கள். இதனால் மிகுந்த ஏமாற்றமும், வருத்தமும் அடைந்தான் அப்துல்லாஹ் இப்னு உபை. மக்கள் அனைவரும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு விட்டதால் வேறு வழியின்றி தானும் வெளிரங்கத்தில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டான். ஆனால் மனதுக்குள் காஃபிராகவே இருந்தான்.

நபியவர்களை மதீனாவை விட்டு துரத்தி விட வேண்டும். அல்லது தீர்த்து கட்ட வேண்டும் என்று அவனும் அவனைச் சார்ந்தவர்களும் மனதுக்குள் உறுதி கொண்டார்கள். இவர்களையே முனாஃபிகீன்கள் நயவஞ்சகர்கள் என்று அல்லாஹ் கூறுகிறான்.

**பாங்குசொல்லுதல்:-**

ஐந்து வேளை தொழுகைக்காக முஸ்லிம்களை பள்ளிவாசலுக்கு அழைப்பதற்காக நபி (ஸல்) அவர்கள் பாங்கு சொல்லும் முறையை ஏற்படுத்தினார்கள். **பிலால்** (ரலி) அவர்களை அந்த பணியில் நியமித்தார்கள்.

மதீனா வந்த ஆரம்பத்தில் முஸ்லிம்களின் (தொழுகை திசை) கிப்லாவாக பாலஸ்தீனத்தில் உள்ள **பைத்துல் முகத்தஸ்** இருந்தது. அப்படியே 16 மாதங்கள் நீடித்தது. அதன் பின்பு அல்லாஹுத் தஆலா கஃபாவை கிப்லாவாக ஆக்கினான். அது இன்று வரை தொடர்கிறது. மதீனா சென்ற மறுவருடம் அல்லாஹ் ரமலான் நோன்பையும் கடமையாக்கினான்.

## 5. பத்ருப் போர்

[ஹிஜ்ரி 2- ரமலான் பிறை 17]

மதீனாவில் முஸ்லிம்கள் நல்ல முறையில் தங்கி இஸ்லாத்தை வளர்த்து வருவது மக்கா குரைஷிகளுக்குப் பிடிக்கவில்லை. எனவே பலவித இடையூறுகள் செய்து வந்தார்கள். அதுவரை அல்லாஹ் முஸ்லிம்களை போர் செய்வதை விட்டும் தடுத்திருந்தான். குரைஷிகளின் எதிர்ப்பு அதிகமான பொழுது அல்லாஹுத்தஆலா முஸ்லிம்களுக்கு போர் செய்ய அனுமதி கொடுத்தான்.

அதன் பின் நபி (ஸல்) அவர்கள் சிறுசிறு படைப் பிரிவுகளை குரைஷிகளின் வியாபாரக் கூட்டங்களை வழிமறிப்பதற்காக அனுப்பி வைத்தார்கள். அதன் நோக்கம்

குரைஷிகளை பயமுறுத்துவதும், முஸ்லிம்களுக்கு எதிராக அவர்கள் ஆயுதம் வாங்கி குவிப்பதை தடை செய்வதுமாகும். எனினும் எந்த சண்டையும் நடைபெறவில்லை.

ஹிஜ்ரி இரண்டு ரஜப் மாதம் **அப்துல்லாஹ் பின் ஜஹ்ஷ்** (ரலி) அவர்களின் தலைமையில் **நக்வா** என்ற இடத்திற்கு ஒரு சிறு படையை நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். அவர்கள் **அம்ர் பின் ஹழ்ரமி** என்பவர் தலைமையில் வந்த குரைஷிகளின் வியாபாரக் கூட்டத்தை தடுத்து சண்டை இட்டார்கள்.

இந்தப் போரில் அம்ர் பின் ஹழ்ரமி கொல்லப்பட்டார். இரண்டு பேர் கைது செய்யப்பட்டார்கள். அவர்களின் பொருட்கள் அனைத்தும் மதீனாவுக்கு கொண்டு வரப்பட்டது.

இந்த நிகழ்ச்சி குரைஷிகளுக்கு பயத்தை அதிகப்படுத்தியது. எனவே குரைஷிகள் முஸ்லிம்களுக்கு எதிராக பெரிய படையை திரட்ட விரும்பினார்கள். உடனே **அபூ சுப்யானு**டைய தலைமையில் ஒரு பெரிய வியாபாரக் கூட்டத்தை ஷாம் நாட்டிற்கு அனுப்பினார்கள். அவர்கள் அங்கே சென்று போர் தளவாடங்கள், ஆயுதங்கள் இன்னும் மற்றப் பொருட்களையெல்லாம் வாங்கி ஆயிரம் ஒட்டகங்களில் ஏற்றிக் கொண்டு மக்கா நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

அப்போது நபி (ஸல்) அவர்கள் அந்தப் பயணக் கூட்டத்தை தடுத்து நிறுத்த வேண்டும் என்ற நோக்கத்தில் மதீனாவிலிருந்து தோழர்களோடு கிளம்பினார்கள். அவர்கள் எண்ணிக்கை மொத்தம் **313**ஆகும்.

அவர்களிடத்திலே பெரிய போர் தயாரிப்புகள் எதுவும் இல்லை. நிறைய பேரிடம் வாட்களோ வேறு ஆயுதங்களோ இல்லை. இரண்டு குதிரைகளும், 70 ஒட்டகங்களும் இருந்தன. உண்மையில் இவர்கள் ஒரு பயண கூட்டத்தை

வழிமறிப்பதற்காக சென்றார்களே தவிர போருக்காக செல்லவில்லை.

இவ்வாறு நபி (ஸல்) தலைமையில் மதீனாவாசிகள் கிளம்பி வருவதை அறிந்த அபூ சுப்யான் மக்காவிற்கு சொல்லி அனுப்பி உதவிப்படை அனுப்பும்படிக் கேட்டுக் கொண்டார். உடனடியாக மக்காவாசிகள் சுமார் ஆயிரம் பேர் திரண்டு பெரும் ஆயுதங்களோடு வேகமாக வந்தார்கள்.

அபூசுப்யானும் தனது பயணக் கூட்டத்தின் திசையை மாற்றி கடற்கரை ஓரமாக சென்று அங்கிருந்து வேறு வழியாக மக்காவுக்குச் சென்றார். தாங்கள் பாதுகாப்பாக மக்காவுக்கு வந்து விட்டதாகவும் எனவே உதவிப்படை திரும்ப வந்து விடும்படியும் உதவிப்படை தலைவராக இருந்த அபூஜஹ்லுக்கு கடிதம் எழுதினார். **(படம் - 38)**

ஆனால் அபூஜஹ்லோ "முஸ்லிம்களை அழிப்பதற்கு இதுதான் நல்ல சந்தர்ப்பம்! அவர்களோடு சண்டையிட்டு நபி (ஸல்) அவர்களையும், முஸ்லிம்களையும் இதோடு ஒழித்து விடுவோம்"! என்று கூறி படைகளை அழைத்துக் கொண்டு பத்ர் என்ற இடத்தில் தங்கினான்.

முஸ்லிம்கள் பெரும் போருக்கு தயாராக வரவில்லை. என்றாலும் போர்புரிய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இந்த நேரத்தில் நபி (ஸல்) அவர்கள் சஹாபாக்களிடம் ஆலோசனை செய்தார்கள். அப்போது சஹாபாக்கள், முஹாஜிர்கள், அன்சாரிகள் அனைவரும் "யா ரஸுலுல்லாஹ்! தாங்கள் இட்டக் கட்டளையை நிறை -வேற்ற நாங்கள் துடித்துக் கொண்டு இருக்கிறோம். நீங்கள் கடலில் குதி என்று சொன்னாலும் குதிக்க தயாராக இருக்கிறோம்" என்று கூறினார்கள்.

"மூஸா (அலை) அவர்களிடம் அவர்களின் உம்மத்துக்கள் நீங்களும் உங்கள் ரப்பும் சென்று சண்டையிடுங்கள் நாங்கள்

போருக்கு வரமாட்டோம் என்று கூறியது போன்று நாங்கள் கூறவிடமாட்டோம். யாரஸூலுல்லாஹ் உங்களுக்கு முன்னும், பின்னும், வலமும், இடமும் நாங்கள் சுற்றி நின்று எங்கள் உடலில் ஒரு சொட்டு இரத்தம் இருக்கும் வரை உங்களை பாதுகாப்போம்" என்று வீரமுழக்கம் இட்டனர். அதைக் கண்டு மகிழ்ச்சியடைந்த நபி (ஸல்) அவர்கள் "பாய்ந்து செல்லுங்கள்! வெற்றி நமதே என்று நற்செய்தி பெற்றுக் கொள்ளங்கள்!" என்று கூறினார்கள்.

அந்தப் போரிலே சஃத் பின் அபீவக்காஸ் (ரலி) அவர்களுடைய தம்பி **உமைர் பின் அபீவக்காஸ்** (ரலி) அவர்கள் தானும் கலந்து கொள்ள வேண்டுமென்று ஒளிந்து ஒளிந்து வந்தார்கள். அவர்கள் 16 வயதுடைய சிறுவராக இருந்ததால் அவர்கள் போரில் பங்கெடுக்க வேண்டாமென்று நபி (ஸல்) அவர்கள் தடுத்தார்கள். எனினும் அவர்கள் கடுமையாக அழுதார்கள். என்னை திருப்பி அனுப்ப வேண்டாமென்று கேட்டுக் கொண்-டார்கள். அதனால் அவர்கள் மீது இரக்கம் கொண்ட நபி (ஸல்) அவர்கள் அவர்களும் போரில் கலந்து கொள்ள அனுமதி கொடுத்தார்கள். இறுதியில் அவர்கள் அந்தப் போரில் ஷஹீத் ஆகிவிட்டார்கள்.

அன்று இரவு அல்லாஹுதஆலா மழையை இறக்கினான். அது முஸ்லிம்களுக்கு ரஹ்மத்தாக அமைந்தது. மணல் கெட்டியாகி நடப்பதற்கு வசதியாக ஆனது. அவர்கள் உடலும் தூய்மை அடைந்தது. உள்ளத்திலும் மகிழ்ச்சி பெருக்கெடுத்தது. ஆனால் காஃபிர்கள் தங்கியிருந்த பகுதியில் மிகவும் கடுமையாக மழை பெய்து, சேரும், சகதியுமாக இருந்தது. அதனால் அவர்கள் மிகவும் சிரமத்திற்குள்ளானார்கள்.

நபி (ஸல்) அவர்கள் படையை வழிநடத்துவதற்காக ஒரு மேடான இடத்தில் குச்சிகளை ஊன்றி அதில் பேரீச்சை மர

மட்டைகளை அடுக்கி ஒரு நிழல் ஏற்படுத்தப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் அங்கிருந்து படைகளை கவனித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் போர் நடக்கும் மைதானத்திற்கு சென்று இதோ இந்த இடத்தில் அபூஜஹ்ல் கொல்லப்படுவான். இதோ இந்த இடத்தில் உத்பா கொல்லப்படுவான். இதோ இந்த இடத்தில் ஷைபா கொல்லப்படுவான் என்று ஒவ்வொரு இடமாக சுட்டிக்காட்டினார்கள். **(படம் - 39, 40)**

இரவெல்லாம் நபி (ஸல்) அவர்கள் தொழுத வண்ணமும் அழுத வண்ணமும் கழித்தார்கள். மறுநாள் படைகள் நேருக்கு நேர் சந்தித்து அணிவகுத்து நின்றார்கள். நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் இரு கைகளை ஏந்தி யா அல்லாஹ் இதோ குரைஷிகள் கர்வத்தொடும் பெருமை அடித்தவர்களாகவும் வந்தருக்கிறார்கள். உன்னை எதிர்த்தும் உன் ரஸூலை பொய்யாக்கியும் வந்துருக்கிறார்கள். நீ எங்களுக்கு வாக்களித்த வெற்றியை தருவாயாக! என்று துஆச் செய்தார்கள்.

“யாஅல்லாஹ் இந்த சிறு கூட்டம் அழிந்து விட்டால் இனி பூமியில் உன்னை வணங்குவதற்கு யாரும் இருக்க மாட்டார்கள். ஆகவே எங்களுக்கு உதவி செய் வாயாக!” என்று அல்லாஹ்விடம் தேம்பி தேம்பி அழுதார்கள். அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் “யா ரஸூலுல்லாஹ் அல்லாஹ் தங்களுக்கு உதவி செய்வான். தாங்கள் ஆறுதலாக இருங்கள்” என்று நபியவர்களுக்கு ஆறுதல் சொன்னார்கள்.

**போர் ஆரம்பம்:**

அக்கால வழக்கப்படி போரின் ஆரம்பத்தில் ஓரிரு வீரர்கள் தனிச்சண்டைக்கு அழைப்பார்கள். அதன்பின்னர் போர் ஆரம்பமாகும். அதன்படி காபிர்களின் படைகளி லிருந்து **உத்பா, ஷைபா, வலீத்** மூவரும் முன் வந்து “தங்களிடத்தில் போர் செய்ய யாரும் தயாரா?” என்று கூவி அழைத்தார்கள். அவர்களை எதிர்க்க அன்சாரிகளிலிருந்து

மூவர் முன் வந்தார்கள். அதற்கு அந்த எதிரிகள் "அன்சாரிகள் வேண்டாம் எங்கள் குரைஷி குலத்திலிருந்து போரிட வாருங்கள்" என்றனர். அப்போது **உபைதாஇப்னுஹாரிஸ் (ரலி),ஹம்ஜா(ரலி),அலி(ரலி)** மூவரும் முன் வந்து சண்டை யிட்டார்கள். இந்த போரில் ஹம்ஜா (ரலி), ஷைபாவையும் அலி (ரலி) வலீதையும் வெட்டி வீழ்த்தினார்கள். உபைதா (ரலி) அவர்களும் உத்பாவும் சண்டையிட்டதில் இருவருக்கும் பலத்த காயம் ஏற்பட்டது. உடனே ஹம்ஜா (ரலி), அலி (ரலி) இருவரும் பாய்ந்து எதிரி உத்பாவை கொன்று விட்டு உபைதா (ரலி) அவர்களை தூக்கிக் கொண்டு படைக்கு திரும்பினார்கள். உபைதா (ரலி) அவர்கள் இந்த போர் முடிந்து நான்கு நாட்களுக்கு பின் மதீனா திரும்பும் வழியில் ஷஹீத் ஆனார்கள்.

இதன் பின் இரண்டு படையினரும் மிகக் கடுமையாக சண்டையிட்டுக் கொண்டார்கள். முஸ்லிம்கள் "**அஹத் அஹத்**" என்று சப்தமிட்டுக் கொண்டு எதிரிகளை நோக்கி சிங்கங்களைப் போல் பாய்ந்தார்கள். நபி (ஸல்) அவர்களும் மக்களோடு நின்று கொண்டு "வானம் பூமி அளவு விசாலமான சொர்க்கத்தின் பக்கம் விரைந்து செல்லுங்கள்" என்று வீரர்களுக்கு ஆர்வமூட்டினார்கள்.

மேலும் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடத்திலும் அழுது உதவி கேட்டார்கள். அல்லாஹுத்தஆலா மலக்குகளை உதவிக்காக இறக்கினான்.

நபி (ஸல்) ஒரு பிடி மண்ணெடுத்து "இந்தக் கூட்டம் விரைவில் தோற்கடிக்கப்படும். இவர்கள் புற முதுகிட்டு ஓடுவார்கள்" என்று கூறி எதிரிகளை நோக்கி எறிந்தார்கள். அந்த மண்ணோ எதிரிகள் அனைவரின் கண், மூக்கு, வாயில் சென்றடைந்து அவர்களை நிலை குலைய வைத்தது. நபி (ஸல்) அவர்கள் கவச ஆடையை அணிந்து கொண்டு முஸ்லிம்கள் முன்னிலையில் எதிரிகளுக்கு மிக நெருக்கத்தில்

நின்று கொண்டு "இந்தக் கூட்டம் விரைவில் தோற்கடிக்கப்படும். இவர்கள் புறமுதுகிட்டு ஓடுவார்கள்" என்ற இறைவசனத்தை திரும்ப திரும்ப ஓதினார்கள்.

முஸ்லிம்களின் ஆக்ரோஷமான தாக்குதலை தாங்க முடியாமல் எதிரிகள் சிதறி ஓட ஆரம்பித்தார்கள். அல்லாஹ் முஸ்லிம்களுக்கு மாபெரும் வெற்றியைக் கொடுத்தான். **முஆத்** (ரலி), **முஅவ்வித்** (ரலி) என்ற இரண்டு சிறுவர்களும் "நமது நபி (ஸல்) அவர்களை ஏசக்கூடிய அபூஜஹ்லை நாம் சும்மா விடக்கூடாது" என்று கூறி போர் களத்திற்கு வந்தார்கள். இருவரும் சேர்ந்து அபூஜஹ்லை வெட்டி வீழ்த்தி விட்டு நபி (ஸல்) அவர்களிடம் சென்று "நாங்கள் அபூஜஹ்லை கொன்று விட்டோம் யாரசூலுல்லாஹ்" என்று சொன்னார்கள். இப்போரில் முஅவ்விது (ரலி) அவர்கள் ஷஹீத் ஆகிவிட்டார்கள்.

காபிர்களில் உத்பா, ஷைபா, அபூஜஹ்ல், உமைய்யா போன்ற முக்கிய தலைவர்கள் உட்பட மொத்தம் எழுபது பேர் கொல்லப்பட்டார்கள். இன்னும் **எழுபது** பேர் சிறை பிடிக்கப்பட்டார்கள். அல்லாஹ் முஸ்லிம்களுக்கு மாபெரும் வெற்றியைக் கொடுத்தான். முஸ்லிம்கள் பக்கம் 14 பேர் ஷஹீத் ஆனார்கள். ஷஹீத் ஆன முஸ்லிம்களை தனித்தனியாக தொழ வைத்து நபி (ஸல்) அவர்கள் பத்ரிலேயே அடக்கம் செய்தார்கள். **(படம் - 41,42)**

இறந்து போன காபிர்களின் உடல்களை அங்கிருந்த பாழடைந்த ஒரு கிணற்றில் போடப்பட்டது. அந்தக் கிணற்றருகில் நின்றுக் கொண்டு "உங்கள் ரப்பு உங்களுககு வாக்களித்ததை பெற்றுக் கொண்டீர்களா? எங்கள் ரப்பு எங்களுக்கு வாக்களித்ததைப் பெற்றுக் கொண்டோம் "என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அங்கிருந்த உமர் (ரலி) அவர்கள் யாரசூலுல்லாஹ் இறந்தவர்களிடம் பேசுகிறீர்களே! அவர்களுக்கு

கேட்குமா?” என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் “நிச்சயமாக அவர்கள் நன்றாக கேட்கிறார்கள் என்றாலும் அவர்கள் பதில் கூறமுடியாது” என்று கூறினார்கள்.

வெற்றியுடனும் அல்லாஹுத்தஆலாவுக்கு நன்றி செலுத்திய வண்ணமும் நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு திரும்பினார்கள். போரில் கிடைத்த எதிரிகளின் பொருட்களில் ஐந்தில் ஒரு பங்கை அல்லாஹ்வுக்காக ஒதுக்கிவிட்டு மீதமுள்ள பொருட்களை போரில் கலந்து கொண்ட அனைவருக்கும் பிரித்துக் கொடுத்தார்கள்.

மதீனாவிலும், மதீனாவை சுற்றியிலும் இருந்த பல ஊர் மக்களிடமும் இந்தப் போர் ஒரு பெரிய தாக்கத்தை உண்டுபடுத்தியது. இஸ்லாத்தின் மீது அவர்களுக்கு ஓர் மதிப்பும், மரியாதையும் ஏற்பட்டது. பலரும் தாங்களாகவே முன்வந்து இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள். கைதிகளாக பிடிக்கப்பட்ட மக்காவாசிகளிடம் அவரவர் வசதிக்கேற்ப ஒரு ஈட்டுத் தொகையை நபி (ஸல்) அவர்கள் நிர்ணயம் செய்தார்கள். மக்காவிலிருந்து அந்த தொகையை வரவழைத்துக் கொடுத்து விட்டு அவர்கள் விடுதலையாகி சென்றார்கள்.

கைதிகளில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் ஈட்டுத் தொகைக்குப் பகரமாக மதீனாவில் உள்ள சிறுவர்களுக்கு எழுதப் படிக்க கற்றுக் கொடுக்க நியமிக்கப் பட்டார்கள். அவ்வாறு கற்றுக் கொடுத்தவுடன் விடுதலை செய்யப் பட்டார்கள். எந்த வசதியும் இல்லாதவர்களை எவ்வித ஈட்டுத் தொகையும் இன்றி விடுதலை செய்தார்கள்.

## 6. பனூ கைனுகா முற்றுகை

மதீனாவை சுற்றி வாழ்ந்த மூன்று யூத கூட்டங்களில் **பனூகைனு**காவும் ஒன்றாகும். நபி (ஸல்) அவர்கள்

அவர்களுடன் ஒற்றமையாக வாழவேண்டும் என்ற ஒப்பந்தம் செய்திருந்தார்கள். ஆனாலும் அவர்கள் ஒப்பந்தத்தை மீறி முஸ்லிம்களுக்கு இடையே பல குழப்பங்களை ஏற்படுத்தினார்கள். பத்ர் போரில் முஸ்லிம்கள் வெற்றி பெற்ற பின் அவர்களின் பொறாமை மேலும் அதிகமானது. பல வகையிலும் முஸ்லிம்களுக்கு துன்பம் செய்தார்கள்.

அவர்களின் அழிச்சாட்டியம் அதிகமானபோது நபி (ஸல்) அவர்கள் அவர்களை நோக்கி படையெடுத்து சென்றார்கள். யஹூதிகள் தங்கள் கோட்டைக்குள் சென்று கதவை மூடிக் கொண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் அவர்களின் கோட்டையை முற்றுகையிட்டார்கள். இந்த முற்றுகை பதினைந்து நாட்கள் தொடர்ந்தது.

இறுதியாக அவர்கள் தோல்வியை ஒப்புக்கொண்டு கோட்டையை விட்டு வெளியே வந்தார்கள். அப்போது முனாபிக்குகளின் தலைவன் **அப்துல்லாஹ் இப்னு உபை** "இந்த மக்களை தண்டிக்க வேண்டாம்" என்று சிபாரிசு செய்தான். நபி (ஸல்) அவர்கள் அதை ஏற்றுக் கொண்டு அவர்களை ஊரை விட்டு வேறிடத்திற்கு செல்லும்படி உத்தரவிட்டார்கள்.

அவர்களில் 700 ஆண்களும் மற்றும் பெண்களும், குழந்தைகளும் இருந்தார்கள். அவர்கள் அனைவரும் மதீனாவை விட்டு ஷாம் நாட்டுக்கு சென்றார்கள். அவர்கள் விட்டுச் சென்ற பொருட்களை நபி (ஸல்) அவர்கள் வீரர்களுக்கு பங்கு வைத்துக் கொடுத்தார்கள்.

## 7. உஹதுப் போர்

[ஹிஜ்ரி 3 ஷவ்வால் பிறை 7]

பத்ருப் போரில் மக்காவின் பெரும் பெரும் தலைவர்கள் எல்லாம் கொல்லப்பட்டார்கள். இதற்கு பழிக்குப் பழி

வாங்க வேண்டுமென்று மக்காவாசிகள் துடித்துக் கொண்டி -ருந்தார்கள். மிகப்பெரிய போரை நடத்த ஆட்களையும், செல்வங்களையும், பொருட்களையும் திரட்டினார்கள். கவிஞர்கள் கவிதையால் மக்களிடம் போர் வெறியைத் தூண்டினார்கள்.

இவ்வாறு சுமார் மூவாயிரம் வீரர்கள், மூவாயிரம் ஒட்டகைகள், இருநூறு குதிரைகளோடு அபூசுப்யான் தலைமையில் மக்காவிலிருந்து மதீனாவை நோக்கி கிளம்பினார்கள். **காலித் பின் வலீத், இக்ரிமா இப்னு அபூஜஹ்ல்** போன்ற தலைவர்களும் அதில் பங்கெடுத்தனர்.

இந்த படையைப் பற்றி அறிந்த நபி (ஸல்) அவர்கள் மதீனாவில் முக்கியஸ்தர்களோடு ஆலோசனை செய்தார்கள். சில பெரியவர்கள் “நாம் மதீனாவிலேயே இருப்போம். எதிரிகள் உள்ளே நுழைந்தால் சுற்றி வளைத்து தாக்குவோம்” என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் இந்த கருத்தை ஆதரித்தார்கள். ஆனால் வீரமிக்க வாலிபர்களும் பத்ரில் கலந்த கொள்ளும் பாக்கியம் கிடைக்காத சில தோழர்களும் போர் ஆர்வத்தில் “யாரசூலுல்லாஹ் நாம் எதிரிகளுக்காக காத்திருக்க வேண்டாம். நாமே வெளியேறி சென்று தாக்குவோம்” என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் இறுதியாக இந்த ஆலோசனையை ஏற்றுக் கொண்டு “புறப்பட தயாராகுங்கள்” என்று கூறி தாங்களும் வீட்டிற்கு கவச ஆடைகள் அணிந்துக்கொண்டு வெளியே வந்தார்கள். அப்போது சில சஹாபாக்கள் யாரசூலுல்லாஹ் தங்கள் விருப்பத்திற்கு மாற்றமாக நாங்கள் நடக்க விரும்பவில்லை. மதீனாவில் தங்கி போர் புரிவது நல்லதென தாங்கள் நினைத்தால் அவ்வாறு செய்வோம்” எனக் கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் “ஒரு இறைதூதர் கவச உடை அணிந்து கொண்டால் போர் நடக்காமல் அதை கழற்றுவது அவருக்கு ஆகுமானதல்ல” என்று கூறிவிட்டார்கள்.

ஆயிரம் வீரர்களைக் கொண்ட படையுடன் நபி (ஸல்) அவர்கள் மதீனாவை விட்டுக் கிளம்பினார்கள். மதீனாவிலிருந்து அஷ்ஷவ்த் என்ற இடத்தை அடைந்த போது முனாபிக்குகளின் தலைவனாகிய அப்துல்லாஹ் இப்னு உபை தனது ஆதரவாளர்கள் 300 பேரை அழைத்துக் கொண்டு தாங்கள் போரில் கலந்து கொள்ள மாட்டோம் என்று கூறிவிட்டு மதீனாவிற்கு திரும்பிச் சென்று விட்டான். மீதுமுள்ள 700 பேரை அழைத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்கள் உஹத் மலைக்கு அருகில் தங்கினார்கள்.

படையின் முதுகுப் பக்கம் மலை இருப்பதுப் போன்று அமைத்துக் கொண்டார்கள். காரணம் எதிரிகள் பின் பக்கமாக தாக்கிவிடக்கூடாது என்பதற்காக இவ்வாறு செய்தார்கள். **(படம் - 44)**

அம்பு எறிவதில் தேர்ச்சி பெற்ற 50 போர் வீரர்களை பொறுக்கி எடுத்து அவர்களுக்குத் தலைவராக **அப்துல்லாஹ் இப்னு ஜுபைர்** (ரலி) அவர்களை நியமித்தார்கள். அவர்களை அங்கிருந்த சிறு மலைக்குன்றின் மீது நின்று எதிரிகளை கண்காணித்து வரும்படிக் கூறினார்கள். எதிரிகள் பின்புறமிருந்து நம்மை தாக்க வந்தால் நீங்கள் அவர்களை தடுக்க வேண்டும். எந்த நிலையிலும் என் உத்தரவு வரும்வரை அந்த இடத்தை விட்டும் நகரக்கூடாது என்று உத்தரவிட்டார்கள். **(படம் - 43)**

சிறிய வயதுள்ளவர்களை போரில் கலந்த கொள்ள வேண்டாம் என்று திருப்பி அனுப்பிவிட்டார்கள். அவ்வாறு **சமுரா** மற்றும் **ராபிஃ** என்ற இரண்டு சிறுவர்களையும் போர் களத்தை விட்டு சென்று விடும்படி கூறினார்கள். அவர்கள் இருவருக்கும் 15 வயது தான் ஆகி இருந்தது. அப்போது ராபிஃ உடைய தந்தையார், யாரஸுலல்லாஹ்! என் மகன் மிகவும் நன்றாக அம்பெய்துவான். எனவே அவரையும் படையில் சேர்த்துக் கொள்ளுங்கள் என்று பரிந்துரை

செய்தார்கள். அதை ஏற்றுக் கொண்டு நபி (ஸல்) அவர்கள் அவரை படையில் சேர்த்துக் கொண்டார்கள்.

உடனே சமுரா அவர்கள் யாரஸுலல்லாஹ்! ராபிஃயை மட்டும் அனுமதித்தீர்கள். நான் அவரை விட பலம் மிக்கவன். நான் அவரோடு சண்டையிட்டால் அவரை நான் வீழ்த்தி விடுவேன் என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் அனுமதி கொடுக்கவே இருவரும் மல்யுத்தம் செய்தார்கள். அதில் சமுரா ராபிஃயை வீழ்த்தி விட்டார். எனவே நபி (ஸல்) அவர்கள் அவரையும் படையில் சேர்த்துக் கொண்டார்கள்.

ஹிஜ்ரி 3 ஷவ்வால் பிறை 7 அன்று இந்த போர் நிகழ்ந்தது. போர் ஆரம்பித்த போது அபூசுப்யானின் மனைவி **ஹிந்து பின்த் உத்பா** போர் வீரர்களுக்கு மத்தியில் போர் கவிதைகளைப் படித்து அவர்களுக்கு ஆவேசம் ஊட்டினார். மிக கடுமையான போர் நடைபெற்றது.

ஹிந்துவின் தந்தை உத்பாவையும், சிறிய தந்தை ஷைபாவையும் பத்ரு போரில் ஹஜ்ரத் ஹம்ஜா (ரலி) அவர்கள் வெட்டி வீழ்த்தினார்கள். அதற்கு பழி வாங்க வேண்டும் என்று ஹிந்து துடித்துக் கொண்டிருந்தாள். ஜுபைர் பின் முத்இம் என்பவரின் சிறிய தந்தை துஅய்மா என்பவரையும் ஹம்ஜா (ரலி) அவர்கள் பத்ரிலே கொன்று விட்டார்கள். எனவே ஜுபைர் தனது அடிமை **வஹ்ஷி** என்பவரிடம் நீ ஹம்ஜாவை கொன்றுவிட்டால் உன்னை விடுதலை செய்கிறேன் என்று வாக்குறுதி அளித்தார். ஹிந்துவும் உனக்கு நான் பரிசுகள் கொடுப்பேன் என்று வாக்களித்தார்.

உஹத் போரிலும் ஹம்ஜா (ரலி) அவர்கள் பல எதிரிகளை வெட்டி வீழ்த்தி முன்னேறிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒளிந்து மறைந்து வந்த வஹ்ஷி தனது ஈட்டியை **ஹம்ஜா** (ரலி) அவர்களை நோக்கி எறிந்தார். ஹம்ஜா (ரலி) ஷஹீதாகி விட்டார்கள். ஹஜ்ரத் **முஸ்அப் இப்னு உமைர்** (ரலி) அவர்களும், **ஹன்ளலா** (ரலி)

அவர்களும் ஷஹீதானார்கள். இறுதியில் முஸ்லிம்களின் கடுமையான தாக்குதலை தாங்க முடியாமல் காபிர்கள் பின்வாங்கி ஓடினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் படைக்கு பின்னால் மலை குன்றிலே நிறுத்தி இருந்த 50 வில் வீரர்களும் எதிரிகள் பின்வழியாக வர முயற்சி செய்த பொழுதெல்லாம் அம்பெய்தி அவர்களை துரத்தினார்கள். இவ்வாறு எதிரிகள் முஸ்லிம்களை சூழ்ந்து கொள்ளாமல் பாதுகாத்துக் கொண்டார்கள். இறுதியாக போர் முடிந்தது. எதிரிகள் ஓடி போன பின்னால் வில் வீரர்கள் மலையை விட்டும் இறங்கி வந்தார்கள்.நாமும் சென்று எதிரிகளை துரத்தி, வெற்றி பொருட்களை சேகரிப்போம் என்று எண்ணினார்கள். அவர்களின் தலைவராகிய அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் (ரலி) அவர்கள் "நபி (ஸல்) அவர்கள்உத்தரவு வரும்வரை இந்த இடத்தி -லிருந்து செல்ல வேண்டாம்" என்று தடுத்தார்கள். ஆனால் "போர் முடிந்து விட்டது இனி இங்கு எந்த வேலையு மில்லை" என்று எண்ணி பலரும் சென்று விட்டார்கள்.

இதைப் பார்த்த எதிரிகளின் ஒரு தலைவராகிய ஹாலித் பின் வலீத் பின்புறமாக சுற்றி வந்து முஸ்லிம்களைத் தாக்க ஆரம்பித்தார். மீண்டும் கடும் போர் ஆரம்பித்தது. முஸ்லிம்களை காபிர்கள் சுற்றி வளைத்துக் கொண்டதால் எல்லோரும் சிதறி ஓட ஆரம்பித்தார்கள்.

சிலரோ மலைகளுக்கு மேலே ஏற ஆரம்பித்தார்கள். நபி (ஸல்) அவர்களைச் சுற்றி ஒரு சில வீரர்களே இருந்தார்கள். எப்படியாவது ரஸுல் (ஸல்) அவர்களை கொன்று விட வேண்டும் என்று எதிரிகள் அவர்களை சூழ்ந்துக் கொண்ட தாக்கினார்கள்.

ஒருவன் பெருமானாரை நோக்கி கல் எறிந்தான். அது பெருமானாரின் திருமுகத்தில் பட்டு ஒரு பல் உடைந்து விட்டது. ஒருவன் எறிந்த ஈட்டி பெருமானாரின்

திருமுகத்தில் பட்டு முகத்தில் அணிந்திருந்த இரும்புக் கவசத்தின் இரு ஆணிகள் கழன்று அவர்களின் கன்னத்தில் குத்தியது. நபி (ஸல்) அவர்களின் திருமுகத்திலிருந்து இரத்தம் வழிந்தோடியது. **சஃது இப்னு அபீவக்காஸ்** (ரலி) அவர்களும், **தல்ஹா** (ரலி) அவர்களும் நபியவர்களை காபிர்கள் நெருங்க விடாமல் கடுமையாகப் போர் புரிந்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் திருமுகத்தில் குத்தியிருந்த இரு ஆணிகளையும் **அபூ உபைதா** (ரலி) அவர்கள் தங்கள் பற்களால் கடித்து இழுத்தார்கள். அதில் அவர்களின் இரு பற்களும் விழுந்து விட்டன.

**அபூதுஜானா** (ரலி) அவர்கள் தங்கள் உடலையே கேடயமாக ஆக்கி பெருமானாரை நோக்கி வரும் அம்பு -களையும், ஈட்டிகளையும் தடுத்தார்கள்.

இந்த போரில் ஹஜ்ரத் **முஸ்அப்** (ரலி) அவர்களை **இப்னு கமிஆ** என்ற எதிரி கொன்று விட்டான். முஸ்அப் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு உடல் அமைப்பால் ஒப்பாக இருப்பார்கள். ஆகவே அவர்களை ரஸூலுல்லாஹ் (ஸல்) என்று தவறாக எண்ணிக் கொண்டான். “எனவே நான் முஹம்மதை கொன்று விட்டேன் என்று சப்தமாக கூறினான். அது முஸ்லிம்களுக்கு மத்தியில் இன்னும் கலக்கத்தை ஏற்படுத்தியது”.

ஹஜ்ரத் **கதாதா இப்னு நுஃமான்** என்ற ஸஹாபியின் கண்களில் அம்பு பாய்ந்து கண்கள் வெளியே வந்து விட்டது. நபி (ஸல்) அவர்கள் அந்த கண்களை அதனிடத்திலேயே மீண்டும் வைத்து துஆ செய்தார்கள். அது முன்பை விட அழகானதாக மாறிவிட்டது.

**அனஸ் பின் நள்ர்** (ரலி) என்று ஸஹாபி “இதோ நான் சொர்க்கத்தின் வாடையை நுகர்கிறேன்.” என்று கூறி வீரத்துடன் போர் களத்தில் நுழைந்தார்கள். அங்கே சில

முஸ்லிம்கள் போர் புரியாமல் நின்று கொண்டிருந்ததை பார்த்து, 'நீங்கள் ஏன் இவ்வாறு நின்று விட்டீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் "நபி (ஸல்) அவர்களே இறந்து விட்டார்கள். இனி நாங்கள் போர் புரிந்து என்ன செய்வது?" என்று கேட்டார்கள். அதற்கு அனஸ் (ரலி) அவர்கள் "நபியவர்களே போய்விட்ட பின்பு நீங்கள் வாழ்ந்து என்ன செய்யப் போகிறீர்கள்? நபியவர்கள் எந்த மார்க்கத்திற்காக தியாகம் செய்தார்களோ அந்த மார்க்கத்திற்காக நீங்களும் தியாகம் செய்யுங்கள்" என்று கூறியவர்களாக எதிரிகளை நோக்கி பாய்ந்தார்கள். இறுதியில் ஷஹீதானார்கள்.

**அம்ர் இப்னு ஜமூஹ்** (ரலி) என்ற சஹாபி கால் ஊனமுற்று நொண்டி நொண்டி நடந்து போருக்கு வந்தார்கள். அவர்களின் நான்கு ஆண் பிள்ளைகளும் "நாங்கள் போருக்கு செல்கிறோம். ஊனமுற்றோர்கள் மீது போர் கடமையில்லை. நீங்கள் வீட்டிலேயே இருங்கள்" என தடுத்தார்கள். ஆனால் அவர்களோ "இல்லை இல்லை நானும் போரில் கலந்து ஷஹீதாகி எனது நொண்டி காலோடு சுவர்க்கத்தில் நுழைவேன்" என்று கூறிவிட்டு அதே போல் வீரத்துடன் போர் புரிந்து ஷஹீதானார்கள்.

**ஜியாத்இப்னுசகன்** (ரலி) என்ற சஹாபி பெருமானாரை நோக்கி வந்த எதிரிகளை மிக கடுமையாக போரிட்டு தடுத்தார்கள். இறுதியில் வெட்டுப்பட்டு கீழே விழுந்தார்கள். அவரை தன் அருகில் கொண்டு வரும்படி நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நபியவர்களின் புனித பாதத்தில் தனது கண்ணத்தை வைத்த நிலையில் அவர் உயிர் பிரிந்தது.

**சஃது இப்னு ரபீஃ** (ரலி) என்ற அன்சாரி சஹாபி மிகக்கடுமையாக போரிட்டு இறுதியில் வெட்டுண்டு கீழே விழுந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் ஜைது இப்னு ஸாபித்

(ரலி) அவர்களை "ஸஃதுக்கு எனது சலாமை கூறுங்கள்" என்று கூறி அனுப்பி வைத்தார்கள். நபியவர்களின் சலாமை கேட்ட ஸஃது (ரலி) அவர்கள் பதில் சலாம் கூறி "நான் சொர்க்கத்தின் வாடையை நுகர்ந்து கொண்டிருக்கிறேன்" என்று நபியிடம் கூறுங்கள். மேலும் அன்சாரி ஸஹாபிகளிடத்தில் உங்களில் கடைசி நபருக்கு உயிர் துடிப்பு இருக்கும் வரையிலேயும் நபியவர்களை பாதுகாத்துக் கொள்ளுங்கள் என்று கூறுமாறு சொன்னார்கள். அத்துடன் அவர்கள் உயிர் பிரிந்து விட்டது.

**உபை இப்னு கலஃப்** என்ற காபிர் நபியவர்களை கொல்லப் போகிறேன் என்று கூறி அவர்களை நெருங் -கினான். நபி (ஸல்) அவர்கள் அருகிலிருந்த ஒரு சஹாபியிடம் ஒரு சிறிய ஈட்டியை வாங்கி அவனை நோக்கி எறிந்தார்கள். அது அவனது கழுத்தில் உரசி சிறிய காயம் ஏற்பட்டது. அந்த வலியைத் தாங்க முடியாது அவன் மிகக் கடுமையாக அலறினான். அவனது ஒட்டகத்திலிருந்தும் கீழே விழுந்தான். இவ்வாறு கத்திக் கொண்டே மக்காவை நோக்கி சென்ற அவன் வழியிலேயே இறந்து ஒழிந்தான்.

போர்களத்தில் ஷஹீதாகிக் கிடந்த ஹம்ஜா (ரலி) அவர்களின் உடலை அபூசுப்யானின் மனைவி ஹிந்தா சிதைத்து விட்டார். அவர்களின் ஈரலை உருவி அதை கடித்து துப்பினார்.

அபூதுஜானா (ரலி) அவர்கள் கடுமையாக போர் புரிந்து எதிரிகளை வெட்டி வீழ்த்தினார்கள். நபி (ஸல்) அவர்கள் அங்கிருந்த ஒரு குன்றின் மீது ஏறிக் கொண்டு முஸ்லிம்கள் அனைவரையும் தன்னை நோக்கி வரும்படி அழைத்தார்கள். முஸ்லிம்கள் அனைவரும் பெருமானாரை நோக்கி வந்து மலைக் குன்றிலே ஏறிக் கொண்டார்கள். அங்கே மேலே ஏறிவந்து சண்டையிடுவதற்கு காபிர்கள் துணியவில்லை. மலைக்குக் கீழே அபூசுப்யானுடைய தலைமையில்

காபிர்கள் ஒன்று சேர்ந்து நின்றார்கள். **(படம் - 45)**

“உங்களில் முஹம்மத் இருக்கிறாரா?” என்று அபூசுப்யான் கேட்டார். நபி (ஸல்) அவர்கள் “யாரும் பதில் சொல்ல வேண்டாம்” என்று தடுத்து விட்டார்கள். “அபூபக்கர் இருக்கிறாரா?” என்று கேட்டார். அதற்கும் முஸ்லிம்கள் பதில் கூறவில்லை. “உமர் இருக்கிறாரா?” என்று கேட்டார். அதற்கும் பதில் தரவில்லை. அப்போது அபூசுப்யான் மிகவும் மகிழ்ச்சியடைந்து மூன்று பேரையும் கொன்று விட்டோம் இது எங்களுக்கு போதும் என்று கூறினார். அதைக் கேட்ட உமர் (ரலி) தன்னை அடக்க முடியாமல் “அல்லாஹ்வின் எதிரியே! நீ யாரையெல்லாம் கூறினாயோ அவர்கள் எல்லாம் உயிரோடு தான் இருக்கிறார்கள்” என்று கூறினார்கள்.

அதற்கு அபூசுப்யான் “ஹுபல் என்ற சிலைதான் மிகவும் உயர்ந்தது” என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் “அல்லாஹ் தான் உயர்ந்தவன் அவனே கண்ணியமிக்கவன்” என்று பதிலளிக்க சொன்னார்கள். அவ்வாறே முஸ்லிம்கள் கூறினார்கள். உடனே அபூசுப்யான் “எங்களிடம் உஜ்ஜா இருக்கிறது. உங்களிடம் உஜ்ஜா இல்லையே!” என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் “அல்லாஹ் எங்களுக்கு எஜமானாக இருக்கிறான். உங்களுக்கு யாரும் எஜமான் இல்லையே” என்று பதிலளிக்க கூறினார்கள். அவ்வாறே சஹாபாக்கள் கூறினார்கள்.

அப்போது அபூசுப்யான் “இந்த நாள் பத்ர் போருக்கு பகரமாக பழிக்குப் பழி வாங்கி விட்டோம். கணக்கு சமமாகி விட்டது” என்று கூறினார். அதற்கு உமர் (ரலி) அவர்கள் “ஒரு காலமும் சமமாக முடியாது எங்களில் கொல்லப்பட்டவர்கள் சுவனத்தில் உள்ளார்கள். உங்களிலே கொல்லப்பட்டவர்கள் நரகத்தில் உள்ளார்கள்” என்று பதில் கூறினார்கள்.

அபூசுப்யான் "மீண்டும் அடுத்த வருடம் பத்ர் மைதானத்தில் உங்களை சந்திக்க வருகிறோம்". என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "ஆம் அங்கே சந்திப்போம்" என்று பதில் கூற சொன்னார்கள். அத்தோடு அபூசுப்யான் தனது படைகளை கிளப்பிக் கொண்டு மக்காவுக்குச் சென்று விட்டார்.

இந்தப் போரில் அன்னை ஆயிஷா (ரலி), உம்மு சுலைம் (ரலி), உம்மு ஸலீத் (ரலி), உம்மு ஐமன் (ரலி) போன்ற பெண்மணிகளும் போரில் கலந்து கொண்டு போர் வீரர்களுக்கு தங்களால் முடிந்த உதவியை செய்தார்கள். குடிக்க தண்ணீர் கொண்டு வந்து கொடுக்குதல், காயம் அடைந்தவர்களுக்கு உதவி செய்தல் போன்ற வேலைகளை செய்தார்கள்.

போர் முடிந்த பிறகு நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்த நிலையில் லுஹர் ஜமாஅத்தை தொழ வைத்தார்கள். போரில் ஷஹீத் ஆன ஸஹாபாக்களை குளிப்பாட்டாமல் அப்படியே கபன் அணிவித்து தொழ வைத்து அடக்கம் செய்தார்கள். சில ஸஹாபாக்களுக்கு உடலை முழுமையாக போர்த்துவதற்கு போதுமான கபன் துணி கூட இல்லை. தலையை துணியால் மூடிவிட்டு கால்களுக்கு புல் மற்றும் இலைதழைகளைப் போட்டு அடக்கம் செய்தார்கள். ஒவ்வொரு கப்ருக்கும் இரண்டு நபர்களை வைத்து அடக்கம் செய்தார்கள். அவர்களில் யார் குர்ஆனை அதிகம் மனனம் செய்தவரோ அவரைக் கப்ரின் பக்கவாட்டுக் குழியில் முதலாவதாக வைத்தார்கள்.அதன் பின் நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு திரும்பினார்கள். **(படம் - 46)**

மதீனா திரும்பும் வழியில் **பனுதீனார்** குடும்பத்தைச் சார்ந்த ஒரு பெண்மணியை முஸ்லிம்கள் சந்தித்தார்கள். அந்தப் பெண்மணியின் கணவரும், சகோதரரும், தந்தையும் போரில் கொல்லப்பட்டிருந்தார்கள். இந்த செய்தியை

கூறிய போது அந்த பெண்மணியோ "ரசூல் (ஸல்) அவர்கள் எப்படியிருக்கிறார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு ஸஹாபாக்கள்" அல்ஹம்துலில்லாஹ். அவர்கள் நன்றாக இருக்கிறார்கள்" என்று கூறினார்கள். ரசூல் (ஸல்) அவர்களை காட்டுங்கள் என்று அந்தப் பெண்மணி கூறினார்கள். ஸஹாபாக்கள் நபியவர்களை சுட்டிக்காட்டிய போது ஓடிச் சென்று கண்குளிர பார்த்து "யாரஸூலுல்லாஹ் உங்களைப் பார்த்த பின்பு எனக்கு எல்லா துன்பங்களும் லேசானது" என்று கூறினார்கள்.

உஹதுப் போரில் முஸ்லிம்கள் மொத்தம் எழுபது பேர் ஷஹீதானார்கள். காபிர்கள் இருபத்தி இரண்டு பேர் கொல்லப்பட்டார்கள்.

**இப்போரில்கிடைத்தபடிப்பினைகள்:-**

1. உண்மை முஃமீன்கள் யார் முனாஃபிக்குகள் யார் என்று தெள்ளத் தெளிவாக தெரிந்தது.

2. மேலும் நபி (ஸல்) அவர்களுடைய உத்தரவுக்கு சிறிதளவு மாறு செய்தாலும் அதனால் ஏற்படும் மிகப்பெரிய நஷ்டம் என்னவென்று ஸஹாபாக்கள் நன்றாக அறிந்து கொண்டார்கள். இது போல் பல படிப்பினைகள் உஹதுப் போரில் முஸ்லிம்களுக்கு கிடைத்தது.

**ஹம்ராவுல்அஸத்படைப்பிரிவு**

உஹதுப் போரிலிருந்து திரும்பிய காபிர்கள் மக்காவுக்கு திரும்பி செல்லும் வழியில் "ரவ்ஹா" என்ற இடத்தில் தங்கினார்கள். நாம் முஸ்லிம்களை வேரோடு அழிக்காமல் வந்து விட்டோம். அவர்களில் 70 பேரை நாம் கொன்றோம். ஆனால் அவர்கள் பயந்து ஓடவில்லை. நாம்தான் அங்கிருந்து கிளம்பி வந்துவிட்டோம். இது நமக்கு அவமானம். ஆகவே நாம் மீண்டும் சென்று மதீனாவைத் தாக்குவோம் என்று முடிவு எடுத்தார்கள். இதைக் கேள்விப்பட்ட நபி (ஸல்)

அவர்கள் உஹதுப் போர் முடிந்த மறுநாளே உஹதில் கலந்த கொண்டவர்கள் மட்டும் மீண்டும் கிளம்ப வேண்டும் என்று கூறினார்கள். போரின் களைப்பும் தீரவில்லை. காயங்களும் ஆறவில்லை. ஆனால் ஸஹாபாக்கள் கொஞ்சம் கூட தயங்கவில்லை. மீண்டும் படை திரண்டு மதீனாவிலிருந்து 8 மைல் தொலைவிலுள்ள ஹம்ராவுல் அஸத் என்ற இடத்தில் தங்கினார்கள்.

முஸ்லிம்கள் திரும்பி வருகிறார்கள் என்று கேள்விப்பட்ட மக்கா காபிர்களுக்கு பயம் ஏற்பட்டது. அவர்கள் மக்காவை நோக்கி திரும்பி விட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் அந்த இடத்திலேயே மூன்று நாட்கள் தங்கியிருந்து பின்பு மதீனா திரும்பி விட்டார்கள்.

## 8. ரஜீஃ குழு

ஹிஜ்ரி 4 ஸபர் மாதத்தில் **அழல்** மற்றும் **காரா** என்ற இரண்டு வம்சங்களை சார்ந்த சிலர் நபி (ஸல்) அவர்களிடத்தில் வந்தார்கள். தங்கள் ஊரைச் சார்ந்த பலரும் இஸ்லாத்தில் இணைய இருப்பதாகவும் தங்களுக்கு மார்க்கத்தை கற்று தருவதற்கு சில ஸஹாபாக்களை அனுப்பி வைக்கும்படியும் கேட்டார்கள். எனவே நபி (ஸல்) அவர்கள் ஆறு ஸஹாபாக்களை அவர்களோடு அனுப்பி வைத்தார்கள்.

இவ்வாறு பொய் சொல்லி ஆறு முஸ்லிம்களை அழைத்துக் கொண்டு "**ரஜீஃ**" என்ற இடத்திற்கு சென்றார்-கள். அங்கு சென்றவுடன் நூற்றுக்கணக்கான பேர் சேர்ந்துக் கொண்டு சஹாபாக்களோடு சண்டையிட்டார்கள். சஹாபாக்கள் வீரத்தோடு போரிட்டு இரண்டு பேர்களை தவிர மற்றவர்கள் ஷஹீதானார்கள்.

**ஜைத் இப்னு தஸின்னா** (ரலி) **குபைப் இப்னு அதீ** (ரலி) ஆகிய இரண்டு பேர்களையும் கைது செய்து மக்காவிற்கு கொண்டு சென்றார்கள். ஜைத் இப்னு தஸின்னாவை ஸஃப்வான் இப்னு உமைய்யா என்பவன் விலைக்கு வாங்கி

பத்ரு போரில் அவன் தந்தை உமைய்யா கொல்லப் பட்டதற்கு பதிலாக அவரை கொன்றான்.

பத்ருப் போரில் குபைப் (ரலி) அவர்கள் ஹாரிஸ் என்பவனைக் கொன்றார்கள். எனவே ஹாரிஸின் மகன் உத்பா என்பவன் குபைப் அவர்களை விலைக்கு வாங்கி கொன்றான். கொல்லப்படுவதற்கு முன் குபைப் (ரலி) அவர்களிடம் அபூசுப்யான் வந்து "உனக்கு பகரமாக உங்கள் தலைவர் முஹம்மதுவை கொன்று விடுகிறோம் என்று சொன்னால் நீங்கள் ஒத்துக் கொள்வீர்களா?" என்று கேட்டார்.

அதற்கு குபைப் (ரலி) அவர்கள் "அருமை நாயகம் (ஸல்) அவர்களின் புனித உடலில் ஒரு சிறு முள் குத்துவதைக் கூட நாங்கள் பொறுத்துக் கொள்ளமாட்டோம். அதற்குப் பகரமாக எங்கள் அனைவரின் உயிரையும் துறப்போம்". என்று கூறினார்கள். நபித்தோழர்கள் நபி (ஸல்) அவர்கள் மீது வைத்திருந்த பேரன்பை பார்த்து காபிர்கள் வியந்து போனார்கள்.

தூக்கில் ஏற்றப்படும் முன் குபைப் (ரலி) அவர்கள் எதிரிகளிடம் அனுமதி பெற்று இரண்டு ரக்அத் நபில் தொழுதார்கள். அந்த மக்களை தண்டிக்கும்படி அல்லாஹ்விடம் துஆச் செய்தார்கள். அதன்பின் ஷஹீதாக்கப் பட்டார்கள்.

## 9. பிஃரே மஊனா

**ஆமிர் இப்னு மாலிக்** என்பவன் நபி (ஸல்) அவர்களை சந்தித்து "யாரஸூலுல்லாஹ் நஜ்த்வாசிகளை இஸ்லாத்தின் பக்கம் அழைப்பதற்காக உங்கள் தோழர்களில் ஒரு கூட்டத்தை எங்களோடு அனுப்பி வையுங்கள்" என்று கேட்டான். நபி (ஸல்) அவர்கள் எழுபது ஸஹாபாக்களை அனுப்பி வைத்தார்கள். அவர்கள் குர்ஆனையும், மார்க்க சட்டங்களையும் நன்கு அறிந்தவர்களாக இருந்தார்கள்.

அவர்கள் ஃபிரே மஊனா என்ற பகுதியை அடைந்த போது உஸைய்யா, ரிஃல், தக்வான் என்ற மூன்று கூட்டத் -தினர்கள் ஆயிரக்கணக்கில் திரண்டு வந்து அவர்களோடு சண்டையிட்டார்கள். அவர்கள் அனைவரையும் வெட்டி வீழ்த்தி ஷஹீத் ஆக்கினார்கள். இதில் **கஃப்இப்னுஜைத்** என்ற ஸஹாபி மட்டும் கடும் காயங்களோடு மயக்கமடைந்து விழுந்து விட்டார்கள். அவர்கள் இறந்து விட்டதாக நினைத்து எதிரிகளும் சென்று விட்டார்கள். அதன் பின்பு எழுந்த அவர்கள் மதீனாவுக்கு வந்து விட்டார்கள். இந்த சம்பவம் ரசூல் (ஸல்) அவர்களுக்கும், முஃமீன்களுக்கும் மிகவும் கவலை அளித்தது. நபி (ஸல்) அவர்கள் பஜ்ர் தொழுகையில் அந்த எதிரிகளை தண்டிக்கும்படி முப்பது நாட்கள் அல்லாஹ்விடம் துஆச் செய்தார்கள்.

## 10. பனூ நளீர் கூட்டத்தினரை நாடு கடத்துவது

மதீனாவை சுற்றியுள்ள பகுதிகளில் '**பனுநளீர்**' என்ற யஹூதி கூட்டத்தாரும் இருந்தார்கள். இவர்கள் ரசூல் (ஸல்) அவர்களோடு ஒப்பந்தம் செய்திருந்தாலும் அவ்வப்போது ஒப்பந்தத்தை மீறி முஸ்லிம்களுக்கும், நபி (ஸல்) அவர்களுக்கும் பலவகையில் தொந்தரவு கொடுத்து வந்தார்கள். அத்துடன் நபி (ஸல்) அவர்களை கொலை செய்யவும் முயற்சி செய்தார்கள்.

நபி (ஸல்) அவர்களை பேச்சு வார்த்தைக்காக அழைத்து ஒரு வீட்டுக்கு மேல் இருந்து நபியவர்களின் தலைமேல் பெரிய கல்லைத் தூக்கிப் போட்டு கொலை செய்ய திட்டமிட்டார்கள். அவ்வாறே பெருமானார் (ஸல்) அவர்களை அழைத்துச் சென்று உட்கார வைத்தார்கள்.

அதற்குள் இவர்களின் சதித்திட்டத்தைப் பற்றி ஜிப்ரயீல் (அலை) அவர்கள் ரசூல் (ஸல்) அவர்களுக்கு அறிவித்தார்கள். எனவே உடனே எழுந்து மதீனாவுக்கு வந்த நபி (ஸல்) அவர் -கள் படைகளை திரட்டிச் சென்று அவர்கள் கோட் -டையை

முற்றுகையிட்டார்கள். ஆறுநாட்கள் முற்றுகை -க்குப் பிறகு பனு நளீர் கூட்டத்தினர் சரணடைந்தார்கள். தங்கள் மனைவி, மக்களையும் தேவையான சொத்துக் -களையும் எடுத்துக்கொண்டு மதீனாவை விட்டுக் கிளம்பி விடுவதாக ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். அவ்வாறே கிளம்பி ‘கைபர்’ என்ற இடத்திற்கு சென்று தங்கிக் கொண்டார்கள். அவர்கள் விட்டுச் சென்ற பொருட்களை நபி (ஸல்) அவர்கள் ஏழைகளுக்கு பங்கு வைத்துக் கொடுத்து விட்டார்கள்.

## 11. அஹ்ஸாப் போர்

(அகழ்ப் போர்)

இந்தப் போர் ஹிஜ்ரி ஐந்து ஷவ்வால் மாதம் நடைபெற்றது. இந்தப் போரில் தற்காப்புக்காக முஸ்லிம்கள் மதீனாவைச் சுற்றி அகழ் வெட்டிக் கொண்டார்கள். எனவே கன்தக்-அகழ்ப் போர் எனப்படுகிறது.

மக்காவாசிகள் முஸ்லிம்களை வேரோடு அழித்துவிட வேண்டும் என்ற எண்ணத்தில் அரபு நாட்டில் வாழ்ந்த பல்வேறு கூட்டத்தினர்களையும் ஒன்று திரட்டி மதீனாவை நோக்கி படையெடுத்தார்கள். எனவே இதற்கு அஹ்ஸாப் (பல கூட்டங்களின்) போர் என்றும் அழைக்கப்படுகிறது.

**போரின்துவக்கம்:-**

பனு நளீர் கூட்டத்தைச் சார்ந்த யஹூதிகள் மக்கா வந்து குறைஷிகளிடத்தில் முஸ்லிம்களுக்கு எதிராக ஒரு முடிவான மிகப் பெரிய போரை நடத்த வேண்டும். அதற்கு எங்களால் முடிந்த உதவியை செய்கிறோம்.உங்களுக்கு துணையாக அரபு மக்கள் அனைவரையும் ஒன்று சேர்க்கிறோம் என்று கூறினார்கள். குறைஷிகள் அதற்கு உடன்பட்டு நான்காயிரம் வீரர்கள் தயாரானார்கள். இவ்வாறே இந்த யஹூதிகள் கத்ஃபான், ஃபஜாரா, முர்ரா, அஷ்ஜஃ,அஸத் போன்ற பல கூட்டத்தினரிடம் சென்று போர் செய்யத் தூண்டினார்கள்.

அனைத்து கூட்டத்தினரும் சேர்ந்து சுமார் 10000 வீரர்கள் மதீனாவை நோக்கி படையெடுத்து வந்தார்கள்.

மதீனாவிலே மூவாயிரம் வீரர்களுக்கு மேல் இல்லை. இவ்வளவு பெரும்படை மதீனாவை நோக்கி வந்த பொழுது முஸ்லிம்களுக்கு மாபெரும் அதிர்ச்சியாக இருந்தது.

நபி (ஸல்) அவர்கள் ஸஹாபாக்களிடம் ஆலோசனை செய்தார்கள். அப்போது சல்மான் பார்ஸி (ரலி) அவர்கள் "யாரஸூலுல்லாஹ் எங்களுடைய பாரசீக நாட்டில் எதிரி படைகளிடமிருந்து தற்காத்துக் கொள்ள எங்களைச் சுற்றிலும் நாங்கள் அகழ் வெட்டிக் கொள்வோம். அவ்வாறே இங்கும் செய்யலாம்" என்று கூறினார்கள்.

இந்த ஆலோசனையை நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். மதீனாவின் வடக்குப் பகுதி மட்டும் எதிரிகள் உள்ளே நுழைவதற்கு வசதியான வழியாக இருந்தது. மற்ற மூன்று பகுதிகளிலும், மலைகளும், குன்றுகளும் பேரீட்சை தோட்டங்களும் சூழ்ந்திருந்தன. அந்த வழிகளில் படைகள் உள்ளே வரமுடியாது. எனவே வடக்குப் பகுதியில் மட்டும் இரண்டு மலைகளுக்கு இடையே பெரிய அகழ் வெட்ட ஏற்பாடு செய்யப்பட்டது.

நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு பத்து நபர்களுக்கும் நாற்பது முழம் என்று பிரித்துக் கொடுத்து குழி வெட்டச் செய்தார்கள். பெருமானார் (ஸல்) அவர்களும் பணிகளில் பங்கெடுத்துக் கொண்டார்கள். **(படம் - 47)**

கடுமையான குளிரும், கடும் பசியும் ஸஹாபாக்களை வாட்டியது. பசிக் கொடுமையினால் ஸஹாபாக்கள் வயிற்றில் சப்பையான ஒரு கல்லை வைத்து இறுக்கிக் கட்டிக் கொண்டார்கள். அபூதல்ஹா (ரலி) கூறுகிறார்கள், எங்களின் பசிக் கொடுமையை ரசூல் (ஸல்) அவர்களிடம் சொல்லி எங்களது வயிற்றை திறந்து காட்டினோம். அங்கே ஒரு கல்லை வைத்து கட்டியிருந்தோம். நபி (ஸல்) அவர்கள் தனது

புனித வயிற்றை திறந்து காட்டினார்கள். அங்கே இரண்டு கற்கள் கட்டப்பட்டு இருந்தது.

அந்த நிலையிலும் ஸஹாபாக்கள் அல்லாஹ்வை தஸ்பீஹ் செய்தவர்களாக, புகழ்ந்தவர்களாக சற்றும் களைப்படை -யாமல் உற்சாகத்தோடு நபி (ஸல்) அவர்களோடு சேர்ந்து அகழ் வெட்டினார்கள்.

அல்லாஹும்ம இன்னல் ஈஷ ஈஷுல் ஆகிரா

பஃபிருல் அன்சார வல் முஹாஜிரா

யாஅல்லாஹ்! நிச்சயமாக வாழ்க்கை என்பதே மறுஉலக வாழ்க்கைதான். முஹாஜிர்களையும், அன்சாரிகளையும் நீ மன்னித்து அருள்புரிவாயாக! என்று நபி (ஸல்) அவர்கள் கூறி ஸஹாபாக்களுக்காக துஆச் செய்தார்கள்.

அதற்கு ஸஹாபாக்கள் “நாங்கள் வாழும் காலமெல்லாம் இஸ்லாத்திற்காக போராடுவோம் என்று முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு வாக்குறுதி அளித்திருக்கிறோம்” என்று கவிதையாகக் கூறினார்கள். இவ்வாறு உற்சாகம் தரும் கவிதைகளை படித்துக் கொண்டு அனைவரும் சேர்ந்து குழி வெட்டினார்கள்.

குழி வெட்டும் போது சில அற்புத நிகழ்ச்சிகள் நடந்தன. ஓரிடத்தில் ஒரு கடினமான பாறை குறுக்கிட்டது. பலர் முயற்சி செய்தும் அதை உடைக்க முடியவில்லை. இதை நபி (ஸல்) அவர்களிடத்தில் முறையிட்டார்கள். நபிகளார் வந்து கடப்பாறையை வாங்கி பிஸ்மில்லாஹ் என்று கூறி ஓங்கி அடித்தார்கள். பாறையில் மூன்றில் ஒரு பங்கு பிளந்தது. உடனே நபி (ஸல்) அவர்கள் “அல்லாஹு அக்பர் **ஷாம்** தேசத்தின் சாவிகளை அல்லாஹ் எனக்கு கொடுத்து விட்டான். இதோ அங்குள்ள சிவப்பு நிறக் கோட்டையை நான் பார்க்கிறேன்” என்று கூறினார்கள்.

பின்னர் இரண்டாவது முறையாக ஓங்கி அடித்தார்கள்.

பாறை இன்னும் சற்று பிளந்தது.

உடனே "அல்லாஹு அக்பர்! **பாரசீக** நாட்டின் சாவி -களை அல்லாஹ் எனக்கு கொடுத்து விட்டான். இதோ அங்குள்ள மதாயின் நகரத்தின் வெள்ளை மாளிகையை நான் பார்க்கிறேன்" என்று கூறினார்கள்.

பின்பு மூன்றாவது முறையாக அடித்தார்கள். அந்தப் பாறை முற்றிலும் உடைந்து விட்டது. உடனே நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹு அக்பர்! **யமன்** நாட்டு சாவிகளை அல்லாஹ் எனக்கு கொடுத்து விட்டான். இதோ அங்குள்ள ஸன்ஆ நகரத்தின் தலைவாயிலை நான் இங்கிருந்து பார்க்கிறேன்" என்று கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறியது போலவே இந்த மூன்று நாடுகளும் விரைவில் முஸ்லிம்களின் கைகளில் வந்து விட்டன.

நபி (ஸல்) அவர்கள் பசியோடு இருப்பதைக் கண்ட **ஜாபிர் பின் அப்துல்லாஹ்** (ரலி) அவர்கள் தன் வீட்டில் மனைவியிடம் நபியவர்களுக்காக ரொட்டியும், இறைச்சியும் தயார் செய்யும்படி கூறினார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்களை தங்கள் வீட்டிற்கு உணவருந்த வரும்படி அழைத்தார்கள். நபி (ஸல்) அவர்களோ தன் அனைத்து தோழர்களையும் அழைத்துக் கொண்டு ஜாபிர் (ரலி) அவர்கள் வீட்டிற்கு வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் தங்கள் புனித உமிழ்நீரை மாவிலும், சட்டியிலும் தொட்டு வைத்தார்கள். மாவோ எடுக்க எடுக்க வந்துக் கொண்டே இருந்தது. சட்டியிலிந்த சால்னாவும் அள்ள அள்ள குறையாமல் வந்துக் கொண்டே இருந்தது. அனைத்து ஸஹாபாக்களும் வயிறு நிறைய சாப்பிட்டார்கள். நபி (ஸல்) அவர்களுடைய பரகத்தினால் ஓரிருவர் சாப்பிடக்கூடிய உணவை ஆயிரத்திற்கும் மேற்பட்டவர்கள் வயிறு நிறைய உண்டார்கள்.

அகழ் வெட்டும் பணி இடைவிடாது நடைபெற்றது. இறுதியில் எதிரிகளின் படை உள்ளே நுழையாத அளவிற்கு அவர்களின் குதிரைகளும் தாண்ட முடியாத அளவிற்கு அகழ் தோண்டி தோண்டிய மண்ணை முஸ்லிம்களின் பக்கம் மலைப் போல் குவித்துக் கொண்டார்கள். இது முஸ்லிம்களுக்கு ஒரு பாதுகாப்பு அரண் போன்று அமைந்தது. மதீனாவிலிருந்து சுமார் மூவாயிரம் ஆண்கள் அகழியை பாதுகாப்பதற்காக வரிசையாக நின்று கொண்டிருந்தார்கள். பெண்களையும், சிறுவர்களையும் மதீனாவிலிருந்த சிறு கோட்டையில் பாதுகாப்பாக தங்க வைத்தார்கள்.

பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட எதிரிகள் இன்று ஒரே நாளில் மதீனாவை அழித்து விடுகிறோம் என்று ஆர்ப்பரித்த வண்ணம் அணையுடைத்த வெள்ளம் போல் பாய்ந்து வந்தார்கள். அங்கே மிகப் பெரிய அகழ் இருப்பதைப் பார்த்து வந்தவர்களெல்லாம் அதிர்ச்சியாகி நின்று விட்டார்கள். அதற்கு மேல் ஒரு அடியும் அவர்களால் நகர முடியவில்லை. யாராவது அகழியை நெருங்கினால் முஸ்லிம்கள் அம்பு மழை பொழிந்தார்கள். செய்வதறியாமல் திகைத்த எதிரிகள் அங்கேயே கூடாரம் அமைத்து தங்கினார்கள். ஒரு சிலரோ குதிரையில் வேகமாக வந்து அகழியைத் தாண்ட முயன்றார்கள். ஆனால் அகழியில் விழுந்து எழுந்து ஓடி விட்டார்கள்.

அகழியின் குறுகலான இடத்தில் குதிரையுடன் பாய்ந்து தாண்டி சில குறைஷி வீரர்கள், முஸ்லிம்கள் பக்கம் வந் -தார்கள். முஸ்லிம்கள் அவர்களை சூழ்ந்து கொண்டார்கள். அவர்களில் ஒருவன் அம்ருப்னு அப்துஉத் என்ற வீரனாவான். அவன் ஆயிரம் குதிரை வீரர்களுக்கு சமம் என்று மக்களிடம் பிரபலமானவன். “என்னுடன் நேருக்கு நேர் மோத உங்களில் யாராவது தயாரா?” என்று அவன் சவால் விட்டான். ஹழ்ரத் அலி(ரலி) அவர்கள் இதோ நான் வருகிறேன் என்று கூறி அவ

-னோடு சண்டையிட்டு அவனை வெட்டி வீழ்த்தினார்கள். இதைக் கண்ட மற்றவர்கள் பயந்து ஓடிவிட்டார்கள்.

இவ்வாறு எதிரிகள் பலமுறை அகழைத் தாண்ட முயற்சி செய்தும் முஸ்லிம்கள் விடவில்லை. ஒருவருக்கொருவர் அம்பு எறிந்து சண்டையிட்டுக் கொண்டார்கள். இரவு பகலாக எதிரிகளை கண்காணிக்க வேண்டியிருந்ததால் ஓரிரு தொழுகைகளும் ஸஹாபாக்களுக்கு களாவாக வேண்டி ஏற்பட்டது.

மதீனாவின் மறுபக்கத்தில் இருந்த **பனு குரைளா** இனத் -தைச் சார்ந்த யஹூதிகள் நபி (ஸல்) அவர்களிடத்தில் முஸ்லிம்களுக்கு எதிராக போர் செய்வதில்லை என்றும் எதிரிகள் மதீனாவைத் தாக்கினால் முஸ்லிம்களுக்கு உதவி செய்வதாகவும் ஒப்பந்தம் செய்திருந்தார்கள். ஆனால் இப்போது துரோகம் செய்து ஒப்பந்தத்தை முறித்து விட்டு முஸ்லிம்களுக்கு எதிராக சூழ்ச்சி செய்தார்கள். குறைஷி -களுடன் சேர்ந்துக் கொண்டு அவர்களுக்கு ஆயுதங் -களையும், வீரர்களையும் அனுப்புவதற்கு தயாரானார்கள்.

அவர்களிடம் பேசுவதற்காக நபி (ஸல்) அவர்கள் சில ஸஹாபாக்களை அனுப்பிய போது இனிமேல் எங்களுக்கும், முஸ்லிம்களுக்கும் மத்தியில் எந்த ஒப்பந்தமும் இல்லை என்று கூறிவிட்டார்கள். இந்த இக்கட்டான சூழ்நிலையில் நபி (ஸல்) அவர்கள் சஹாபாக்களிடம் ஆலோசனை செய்தார்கள். எதிரிகளில் **கத்ஃபான்** கூட்டத்தினர்தான் அதிகமாக இருக்கிறார்கள். நாம் அவர்களிடம் மதீனாவின் விளைச்சலில் மூன்றில் ஒரு பங்கை தருவதாக ஒப்பந்தம் செய்து சண்டையிலிருந்தும் விலகிக் கொள்ளுமாறு பேச்சு வார்த்தை நடத்தலாமா? என்று விசாரித்தார்கள்.

அதற்கு அன்சாரிகளின் தலைவர்களான **சஃத் இப்னு முஆத் (ரலி) சஃத் இப்னு உபாதா (ரலி)** இருவரும் "யாரஸூலுல்லாஹ் நாங்கள் சிலை வணக்கத்தில் இருந்த

போது கூட யாருக்கும் பணிந்து சென்றதில்லை. அல்லாஹ் எங்களை இஸ்லாத்தைக்கொண்டு கண்ணியப்படுத்திய பின்பு இப்போது ஏன் பணிய வேண்டும். நமக்கும், அவர்களுக்கும் மத்தியில் அல்லாஹ் தீர்ப்பளிக்கும் வரை நாம் போராடுவோம் என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்களும் அதை ஏற்றுக் கொண்டார்கள். எதிரிகளின் முற்றுகை சுமார் ஒருமாத காலம் நீடித்தது. முஸ்லிம்களுக்கு மிகவும் இக்கட்டான சூழ்நிலையாக ஆனது.

இதற்கிடையில் முஸ்லிம்கள் போர்வையில் வாழ்ந்த முனாபிக்குகளும், முஸ்லிம்களை விட்டும் விலகிக் கொண் -டார்கள். நபி (ஸல்) அவர்களும், ஸஹாபாக்களும் இந்த கடுமையான சூழ்நிலையில் முஸ்லிம்களை பாதுகாக்கும்படி அல்லாஹ்விடத்தில் கண்ணீர் வடித்து அழுதார்கள். அல்லாஹுதஆலா தன் புறத்திலிருந்து உதவிகளை இறக்கி வைத்தான்.

கத்ஃபான் கிளையைச் சார்ந்த **நுஅய்ம் இப்னு மஸ்ஊத்** (ரலி) என்பவர் மனம் மாறி இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு யாருக்கும் தெரியாமல் நபி (ஸல்)அவர்களிடத்தில் வந்து சேர்ந்தார். "யாரஸுலுல்லாஹ் நான் முஸ்லிமாகி விட்டேன். நான் முஸ்லிமானது என் கூட்டத்தார் யாருக்கும் தெரியாது. நான் தங்களுக்கு ஏதேனும் உதவி செய்யட்டுமா? எனக் கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "போர் என்பதே தந்திரம் தான். எனவே எதிரிகளிடையில் குழப்பத்தை உண்டுபண்ணும் அளவிற்கு உங்களால் முடிந்ததை செய்யுங்கள்" என்று கூறினார்கள்.

உடனே நுஅய்ம் அவர்கள் நேராக **பனு குரைளா** யஹுதிகளிடம் சென்றார். அவர்களிடம் அன்பாக பேசி தன்னை நம்பும் படி செய்துக் கொண்டார். பின்னர் அவர்களிடம் "குறைஷிகள் தலைமையில் வந்த படைகளுக்கு நீங்கள் உதவி செய்கிறீர்கள். ஆனால் அவர்களுக்கு உங்கள்

மீது நல்லெண்ணம் கிடையாது. போர் கடுமையானால் அவர்கள் உங்களை கை விட்டுவிட்டு தப்பித்து சென்று விடுவார்கள். பின்னர் நீங்கள் மட்டும் முஸ்லிம்களிடம் மாட்டிக் கொள்வீர்கள்" என்றுக் கூறினார். அதைக் கேட்டு அதிர்ச்சியடைந்த யஹூதிகள் "ஆமாம் ஆமாம் நாங்கள் இப்போது என்ன செய்வது" என்று கேட்டார்கள்.

அதற்கு நுஅய்ம் "குறைஷிகளில் சில முக்கியமான நபர்களை உங்களிடத்திலே அடமானமாக வைத்துக் கொள்ளுங்கள். போர் முடிந்த பின்பு ஒப்படைப்பதாக கூறிவிடுங்கள். இந்த நிபந்தனைக்கு அவர்கள் ஒப்புக் கொள்ளாவிட்டால் அவர்களுக்கு எந்த உதவியும் செய்யாதீர்கள்" என்று கூறினார்கள். யஹூதிகளும் அதை ஒப்புக் கொண்டார்கள்.

பின்னர் அங்கிருந்து கிளம்பிய நுஅய்ம் குறைஷிகள் மற்றும் கத்ஃபானிய தலைவர்களை சந்தித்து பேசினார். "எனக்கொரு முக்கியமான ரகசிய செய்தி வந்துள்ளது. யஹூதிகள் உங்களுக்கு துரோகம் செய்து முஹம்மதுடன் சேர்ந்து கொண்டார்களாம். உங்களிலிருந்தும் சில முக்கிய நபர்களை அழைத்துச் சென்று முஹம்மதிடம் (ஸல்) ஒப்படைப்பதற்கு எண்ணியுள்ளார்களாம். எதற்கும் நீங்கள் எச்சரிக்கையாக இருங்கள்" என்று கூறினார்.

அதன்பின் யஹூதிகள் குறைஷிகளிடம் ஆள் அனுப்பி சில முக்கிய நபர்களை அடமானமாக கேட்கவே குறைஷிகள் கோபமடைந்து யாரையும் அனுப்ப முடியாது என்று கூறி யஹூதிகளை திருப்பி அனுப்பினார்கள். அதைக் கண்ட யஹூதிகளும் கோபமடைந்து நாங்களும் எந்த உதவியும் செய்ய முடியாதென்று விலகிக் கொண்டார்கள்.

இவ்வாறு எதிரிப் படையில் பிளவு ஏற்பட்டவுடன் எதிரிகளுக்கு அச்சம் சூழ்ந்து கொண்டது. இந்நிலையில் அல்லாஹுதஆலா மிகக் கடுமையான ஒரு சூரைக் காற்றை

அனுப்பி வைத்தான்.

எதிரிகளின் கூடாரங்களெல்லாம் பறந்தன. அவர்களின் உணவுப் பொருள்களும் மூலைக்கு ஒன்றாய் ஓடிப் போய் மறைந்தன. எதிரிகள் நிலை குலைந்து போனார்கள். மீண்டும் அங்கு தங்குவதற்கு எந்த வழியும் அவர்களுக்கு தெரிய -வில்லை. எனவே இரவோடு இரவாக எல்லோரும் கிளம்பி விட்டார்கள்.

விடியற்காலையில் அங்கே ஒருவரும் இல்லை. நபி (ஸல்) அவர்களும், ஸஹாபாக்களும் அல்லாஹ்வை புகழ்ந்த -வர்களாக மதீனாவிற்கு திரும்பினார்கள். **(படம் - 48)**

இதைப் பற்றி அல்லாஹ் குர்ஆனில் சொல்லும் போது

“இந்த காபிர்களை அல்லாஹுத்தஆலாவே முறியடித்தான். அவர்கள் எந்த நன்மையும் பெற்றுக் கொள்ளவில்லை. அல்லாஹுத்தஆலாவே முஃமின்களுக்கு போர் விஷயத்தில் பொறுப்பு ஏற்றுக் கொண்டான். அல்லாஹுத்தஆலா சக்தி வாய்ந்தவனாகவும், அனைத்தையும் மிகைப்பவனாகவும் இருக்கிறான் என்று கூறினான்.”

இந்தப் போரில் பெரிதாக சண்டை ஏதும் நடைபெறவில்லை. ஆங்காங்கே அம்பெறிந்து சண்டையிட்டுக் கொண்டார்கள். முஸ்லிம்கள் பக்கம் 7பேரும், காபிர்கள் பக்கம் 4 பேரும் கொல்லப்பட்டார்கள்.

இவ்வளவு பெரும் படையை மிகப் பெரிய முயற்சி செய்து காபிர்கள் திரட்டிக் கொண்டு வந்திருந்தார்கள்.

ஆனால் அவர்களால் வெற்றி பெற முடியவில்லை. எனவே நபி (ஸல்) அவர்கள் இனிமேல் எதிரிகள் நம்மீது போர் தொடுக்கமாட்டார்கள். நாம்தான் அவர்கள் மீது போர் தொடுப்போம் என்று கூறினார்கள் அவ்வாறே ஆனது.

# 12. பனூ குரைளாப் போர்

அகழ்ப் போர் முடிந்து நபி (ஸல்) அவர்கள் வீட்டுக்கு திரும்பிய போது வானவர்களின் தலைவர் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் வந்து "நீங்கள் ஆயுதங்களை கீழே வைத்து விட்டீர்களா? மலக்குமார்கள் இன்னும் தங்கள் ஆயுதங்களை கீழே வைக்கவில்லை. உடனே பனூ குரைளாக்களை நோக்கி செல்லுங்கள்" என்று கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஸஹாபாக்களோடு கிளம்பி வந்து பனூ குரைளாக்களின் கோட்டைகளை முற்றுகை இட்டார்கள்.

பனூ குரைளாக்கள் போரில் முஸ்லிம்ளுக்கு உதவி செய்வதாக ஒப்பந்தம் செய்திருந்தார்கள்.

ஆனால் இப்போது அந்த ஒப்பந்தத்தை முறித்தது மட்டுமில்லாமல் போரில் எதிரிகளோடு சேர்ந்து கொண்டார்கள்.

எனவே துரோகிகளான அவர்களை இனியும் விட்டு வைத்தால் அது மதீனாவுக்கு ஆபத்து என்பதால் நபி (ஸல்) அவர்கள் பனு குரைளாக்களோடு போர் தொடுத்தார்கள். அவர்களோ போருக்கு பயந்து, கோட்டைக்குள் ஒளிந்து கொண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் 25 நாட்கள் கோட்டையை முற்றுகையிட்டார்கள். இறுதியில் அவர்கள் சரணடைந்தார்கள்.

பனூ குரைளா யஹூதிகள் மதீனாவில் இருக்கும் **அவ்ஸ்** கூட்டத்தாரின் நண்பர்களாக இருந்தார்கள். எனவே அவ்ஸ் கூட்டத்தாரின் தலைவராகிய **ஸஅத் இப்னு முஆத்** (ரலி) அவர்களிடமே நபி (ஸல் )அவர்கள் தீர்ப்பு வழங்கும் பொறுப்பை ஒப்படைத்தார்கள். அப்போது ஸஅத் இப்னு முஆத் (ரலி) அவர்கள் "துரோகம் செய்த இவர்களுக்கு தண்டனை இவர்களில் உள்ள போர் வீரர்களை கொன்று

விட வேண்டும். பெண்கள் மற்றும் சிறுவர்களை கைது செய்ய வேண்டும். இவர்கள் சொத்துகள் அனைத்தும் பறிமுதல் செய்யப்பட வேண்டும்" என்று தீர்ப்பளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வின் தீர்ப்பைத்தான் நீங்களும் கூறியிருக்கிறீர்கள்" என்று கூறினார்கள்.

ஏனெனில் **பனூ இஸ்ராயீல்கள்** பின்பற்றும் தவ்ராத்திலும் இதுவே துரோகத்தின் தண்டனையாக கூறப் -பட்டுள்ளது இந்தத் தீர்ப்பையே நிறைவேற்றப்பட்டது.

## 13. சுமாமத் இப்னு உஸால் (ரலி)

சுமாமத் இப்னு உஸால் என்பவர் பனுஹனிபா என்ற கூட்டத்தை சார்ந்தவர். இவர் யமாமா என்ற இடத்தில் வசித்து வந்தார். அவர் முஸ்லிம்களுக்கு மிகவும் துன்பம் கொடுத்து வந்தார். நபி (ஸல்) அவர்களையே கொலை செய்து விட வேண்டுமென்று திட்டமிட்டு அவர் நாட்டிலிருந்து கிளம்பி வந்தார்.

வழியில் இஸ்லாமிய படையினர் அவரை கைது செய்து நபி (ஸல்) அவர்களிடத்தில் கொண்டு வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் மஸ்ஜிதுன் நபவியின் ஒரு தூணில் அவரை கட்டி வைக்கச் செய்தார்கள். "சுமாமாவே நான் உன்னிடத்தில் எப்படி நடக்க வேண்டும்" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர் "நீங்கள் என்னைக் கொன்றால் அதுவும் சரிதான். ஏனெனில் நான் ஒரு குற்றவாளி தான். நீங்கள் என்னை மன்னித்து விட்டால் நான் நன்றியுள்ளவனாக இருப்பேன். நீங்கள் கேட்கின்ற பொருளை நான் உங்களுக்கு தருவேன்" என்று கூறினார்.

நபி (ஸல்) அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை. அவர் மஸ்ஜிதுந் நபவியிலேயே இருந்து நபி (ஸல்) அவர்கள் தொழுகும் முறையையும், அவர்களின் உபதேசங்களையும், ஸஹாபாக்களின் நடைமுறைகளையும் பார்த்து

கொண்டிருந்தார்.

அவர் உள்ளத்திலே பெரிய மாற்றம் உண்டானது. பின்னர் நபி (ஸல்) அவர்கள் எந்த நிபந்தனையும் இன்றி அவரை விடுதலை செய்து அனுப்பினார்கள்.

அவர் நேரே பக்கத்திலிருந்த தோட்டத்திற்கு சென்று குளித்து விட்டு நபியவர்களிடம் வந்து இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்.

அவர் கூறினார்: "யாரஸூலுல்லாஹ்! அல்லாஹ் மீது ஆணையாக! இந்தப் பூமியில் உங்களது முகத்தை விட வெறுப்பான முகம் எனக்கு இருந்ததில்லை. ஆனால் இப்பொழுதோ உங்கள் திருமுகம் தான் எல்லா முகங்க -ளையும் விட எனக்கு விருப்பமாக ஆகிவிட்டது.

தங்கள் மார்க்கத்தை விட வெறுப்பான மார்க்கம் எதுவும் இருக்கவில்லை. ஆனால் இப்போதோ அனைத்து மார்க்கங்களை விட தங்களது மார்க்கம் தான் எனக்கு பிரியமாகிவிட்டது" என்று கூறினார்.

இஸ்லாத்திற்கு வந்த பின்பு ஹஜரத் சுமாமா (ரலி) அவர்கள் "நான் உம்ரா செய்வதற்கு நாடியிருந்தேன் போகலாமா!" என்று நபி (ஸல்) அவர்களிடத்தில் அனுமதி கேட்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அனுமதி கொடுத்தார்கள். மக்காவுக்கச் சென்ற சுமாமா (ரலி) அவர்களை குறைஷிகள் "சுமாமாவே! மதம் மாறிவிட்டீரே!" என்று பழித்து உரைத்தார்கள்.

அதைக் கண்டு கோபம் அடைந்த சுமாமா (ரலி) அவர்கள் எனது ஊரான **யமாமா**விலிருந்து தான் உங்களுக்கு கோதுமையும் இன்னும் மற்ற உணவுப் பொருட்களும் வருகின்றன. இனிமேல் அவற்றை வரவிடாது தடுத்துவிடுவேன். நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டால் தான்

மீண்டும் அனுப்புவேன் என்று கூறிவிட்டார்கள்.

அவ்வாறே யமாமாவுக்கு சென்று உணவுப்பொருட்கள் வருவதை தடுத்து விட்டார்கள். இதனால் மிகப் பெரிய சிரமத்திற்கு உள்ளான குறைஷிகள் நபி (ஸல்) அவர்களுக்கு கடிதம் எழுதி உறவின் முறையை கருதி எங்களுக்கு உதவி செய்யுமாறு கெஞ்சி கேட்டு கொண்டார்கள்.

எனவே நபி (ஸல்) அவர்கள் இரக்கப்பட்டு மீண்டும் உணவு, தானியம் வருவதற்கு ஏற்பாடு செய்தார்கள்.

பகுதி – 6

# ஹுதைபிய்யா உடன்படிக்கை

## 1. ஹுதைபிய்யா உடன்படிக்கை

ஹிஜ்ரி 6ம் ஆண்டு நபி (ஸல்) அவர்கள் மக்கா சென்று உம்ரா செய்வது போன்று கனவு கண்டார்கள்.

இந்தக் கனவை நிறைவேற்றுவதற்காக ஹிஜ்ரி 6ஆம் ஆண்டு துல்கஃதா மாதம் மக்காவுக்கு கிளம்பினார்கள். நபியவர்களோடு செல்வதற்கு 1500 ஸஹாபாக்களும் தயாரா -னார்கள். உம்ராவுக்காக இஹ்ராம் உடை கட்டிக்கொண்டு தங்களோடு குர்பானி ஆடுகளையும் அழைத்துக் கொண்டு மக்காவை நோக்கி எல்லோரும் சென்றார்கள்.

மக்காவுக்கு அருகில் உள்ள ஹுதைபிய்யா என்ற இடத்திற்கு சென்று நபி (ஸல்) அவர்கள் தங்கினார்கள். அங்கிருந்த ஒரு கிணற்றில் சிறதளவு தண்ணீர் இருந்தது. அது அனைவருக்கும் போதுமானதாக இல்லை. அதையறிந்த நாயகம் (ஸல்) அவர்கள் தங்களுடைய ஒரு அம்பை எடுத்துக் கொடுத்து அதை அந்த தண்ணீரில் வைக்கச் சொன்னார்கள்.

உடனே தண்ணீர் பொங்கி வழிந்தது. அனைத்து ஸஹாபாக்களும் அதை பயன்படுத்திக்கொண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் போர் செய்ய வருவதாக பயந்த குரைஷிகள்

ஒரு நடுவரை அனுப்பி வைத்தார்கள். அவரிடம் நபி (ஸல்) அவர்கள் “நாங்கள் போருக்கு வரவில்லை. உம்ரா செய்யவே வந்துள்ளோம். அதை முடித்துவிட்டு சென்று விடுகிறோம்” என்று கூறி அனுப்பினார்கள்.

மேலும் பேச்சு வார்த்தை நடத்துவதற்காக **உஸ்மான்** (ரலி) அவர்களையும் மக்காவுக்கு அனுப்பி வைத்தார்கள். உஸ்மான் (ரலி) அவர்களுடன் மக்கா தலைவர் அபூசுப்யானும் மற்றவர்களும் பேச்சு வார்த்தை நடத்தினார்கள்.

ஒருமுடிவு எட்டவில்லை என்பதால் உஸ்மான் (ரலி) அவர்கள் ஓரிரு நாட்கள் அங்கு தங்கும்படி ஏற்பட்டது. ஆனால் அதற்குள் உஸ்மான் (ரலி) அவர்களை மக்காவாசிகள் கொலை செய்து விட்டார்கள் என்று ஒரு வதந்தி பரவியது.

முஸ்லிம்கள் மிகக்கடுமையாக கோபம் அடைந்தார்கள். அனைவரும் நபி (ஸல்) அவர்களிடத்தில் வந்து “நாம் குரைஷிகளோடு போர் புரிவோம். எங்கள் உயிர்பிரியும் வரை போரிலிருந்து பின் வாங்க மாட்டோம்” என்று நபி (ஸல்) அவர்களின் கையைப் பிடித்து ஒப்பந்தம் செய்தார்கள்.

இந்த ஒப்பந்தத்திற்கு “**பைஅதே ரிழ்வான்**” என்று பெயர். ஒரு மரத்தடியில் இந்த ஒப்பந்தம் நிகழ்ந்ததால் பைஅதே ஷஜரா என்றும் சொல்வார்கள்.

அல்லாஹுத்தஆலா “நபியே! உங்களிடம் ஒப்பந்தம் செய்தவர்கள் நிச்சயமாக அல்லாஹுத்தஆலாவிடம் தான் ஒப்பந்தம் செய்தார்கள். அவர்களுடைய கைமேல் அல்லாஹ்வுடைய கைதான் இருந்தது” என்று கூறினான். நபியுடைய கையை தன்னுடைய கை என்று கூறி பெருமைப்படுத்தினான்.

இதைக் கேள்விப்பட்ட குரைஷிகள் பயந்து உஸ்மான் (ரலி) அவர்களை உடனே அனுப்பி வைத்தார்கள். மேலும் நபி (ஸல்) அவர்களிடம் சமாதான ஒப்பந்தம் செய்வதற்காக **சுஹைல் இப்னு அம்ரு** என்பவரை அனுப்பி வைத்தார்கள். அவர் நபி (ஸல்) அவர்களிடம் மக்காவாசிகள் சார்பாக பேச்சு வார்த்தை நடத்தி இறுதியில் ஒரு ஒப்பந்தத்தை எழுதி முடித்தார்கள். அலி (ரலி) அவர்கள் அதை எழுதினார்கள்.

அதன் சுருக்கம்: -

1. முஸ்லிம்கள் இந்த வருடம் மக்காவிற்குள் நுழையக்கூடாது. அடுத்த வருடம் வந்து மக்காவில் மூன்று நாட்கள் தங்கி உம்ரா செய்து கொள்ளலாம்.

2. பத்து வருடங்களுக்கு போர் நிறுத்தம் செய்யப்படுகிறது. ஒருவர் அடுத்தவற்கு எந்த தீங்கும் செய்யக் கூடாது.

3. மக்காவாசிகள் யாரும் முஸ்லிமாகி மதீனா வந்துவிட்டால் அவர்களை திருப்பி அனுப்பிவிட வேண்டும். ஆனால் மதீனாவாசிகள் யாரும் தப்பித்து மக்கா வந்துவிட்டால் திருப்பி அனுப்பமாட்டோம்.

4. முஸ்லிம்களும், குரைஷிகளும் செய்து கொள்ளும் ஒப்பந்தம் இது. இவர்கள் அல்லாத மற்ற சிறிய கூட்டங்கள் இந்த இருவரில் யாருடனாவது சேர்ந்து கொள்ளலாம். அப்படி சேர்ந்து கொண்டால் ஒப்பந்தப்படி அவரையும் மதிக்க வேண்டும்.

இவ்வாறு ஒப்பந்தம் எழுதிக் கொண்டிருக்கும் பொழுது சுஹைல் இப்னு அம்ருடைய மகன் **அபூஜந்தல்** (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்று முஸ்லிம்களிடத்திலே வந்தார்கள்.

அவர்களை மக்காவுக்கு தன்னுடன் திருப்பி அனுப்பிவிடவேண்டுமென்று சுஹைல் கேட்டார். அதற்கு

நபி (ஸல்) அவர்கள் இன்னும் ஒப்பந்தம் எழுதி முடிக்க -வில்லை. எனவே இவரை அனுப்ப முடியாது என்று சொன்னார்கள்.

ஆனால் சுஹைல் விடுவதாக இல்லை. இறுதியாக நபி (ஸல்) அவர்கள் அபூஜந்தல் (ரலி) அவர்களுக்கு ஆறுதல் சொல்லி அல்லாஹ் உங்களுக்கு அருள்புரிவானாக! என்று துஆ செய்து அவர்கள் தந்தையுடன் அனுப்பி வைத்தார்கள்.

இந்த ஒப்பந்தம் முஸ்லிம்களுக்கு மிகவும் வருத்தமாகவும், வேதனையாகவும் இருந்தது. வீரமிக்க முஸ்லிம்களோ இவ்வாறு நாம் எதிரிகளிடத்தில் தாழ்ந்து போக வேண்டுமா? என்று மிகவும் ரோஷம் அடைந்தார்கள்.

மேலும் உம்ராவுக்கு செல்ல முடியாததாலும் பலி பிராணிகளை அறுக்க முடியாததாலும் அவர்களுக்கு மிகவும் ஏமாற்றமாக இருந்தது. நபி (ஸல்) அவர்கள்தங்கள் தலைமுடியை ஹுதைபிய்யாவிலே மொட்டை அடித்துக் கொண்டு தங்கள் குர்பானியையும் அறுத்தார்கள்.

அதைப்பார்த்த மற்ற அனைத்து ஸஹாபாக்களும் அவ்வாறே செய்தார்கள்.பின் அனைவரும் மதீனா திரும்பினார்கள். திரும்பும் வழியில் நாம் உமக்கு **மிகப் பெரிய வெற்றியை** கொடுத்தோம். அல்லாஹ் ஆயத்தை இறக்கினான். அப்போது உமர் (ரலி) அவர்கள் யாரசூலல்லாஹ் இது என்ன வெற்றியா? எனக் கேட்டார்கள். ஆம் இது மிகப் பெரிய வெற்றி" என்று நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

அதைப்போன்றே அல்லாஹ் அந்த ஒப்பந்தத்தால் ஏராளமான நன்மைகளை ஏற்படுத்தினான். இதுவே ஹுதைபிய்யா உடன்படிக்கை எனப்படுகிறது. **(படம் - 49)**

## 2. ஹுதைபிய்யா உடன்படிக்கையால் கிடைத்த நன்மைகள்

*1. முஸ்லிம்கள் சுதந்திரமாக அரபுநாடுகள் சென்று இஸ்லாத்தை பரப்புவது வசதியாகி விட்டது. அதுவரை முஸ்லிம்கள் எங்கு சென்றாலும் காபிர்கள் இடையூறு செய்து வந்தார்கள். தற்போது பயமின்றி ஊர்ஊராக சென்று இஸ்லாத்தை எடுத்துரைத்தார்கள். எனவே மக்கள் கூட்டம் கூட்டமாக இஸ்லாத்தை நோக்கி வந்தார்கள்.*

*2. **ஹாலித் பின் வலீத் (ரலி), அம்ரு பின் ஆஸ் (ரலி)** போன்ற மக்காவின் பெரும் பெரும் தலைவர்கள் உட்பட மக்காவாசிகள் பலரும் இஸ்லாத்தை தழுவ ஆரம்பித்தனர்.*

*3. **கைஸர், கிஸ்ரா, எகிப்து** போன்ற பல நாட்டு மன்னர்களுக்கும் மற்றும் பல சமுதாய தலைவர்களுக்கும், நபி (ஸல்) அவர்கள் கடிதம் எழுதி அதை ஸஹாபாக்களிடம் கொடுத்து அனுப்பினார்கள். அதில் ஒரு சிலர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள். சிலர் ஆதரவு கொடுத்தார்கள். ஒரு சிலர் மறுத்து விட்டார்கள்.*

*4. மக்காவிலிருந்து **அபூபஷீர்** (ரலி) என்பவர் முஸ்லிமாகி மதீனாவுக்கு வந்தார்கள். ஒப்பந்தப்படி நபி (ஸல்) அவர்கள் அவர்களை மக்காவுக்கே திருப்பி அனுப்பினார்கள். அவர்கள் மக்காவிற்கு செல்லாமல் ஒரு கடற்கரை ஓரமாக சென்று தங்கிக் கொண்டார்கள்.*

*இவ்வாறே மக்காவிலிருந்து முஸ்லிமான பலபேரும் அவரோடு சென்று தங்கிக் கொண்டார்கள். மக்காவிலிருந்து ஏதும் வியாபாரக்கூட்டம் அந்த வழியாக சென்றால் அவர்களிடமிருந்து கொள்ளை அடித்து பொருட்களை கைப்பற்றிக் கொள்வார்கள்.*

*இதனால் பெரும் துன்பத்திற்கு உள்ளான குரைஷிகள் நபி (ஸல்) அவர்களிடம் மக்காவிலிருந்து வரும்*

முஸ்லிம்களை தயவு செய்து நீங்கள் மதீனாவிலேயே வைத்துக் கொள்ளுங்கள் என்று கேட்டுக் கொண்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அவ்வாறே அவர்களை வைத்துக் கொண்டார்கள். உடன்படிக்கை செய்தபடியே மறுவருடம் முஸ்லிம்கள் உம்ராவுக்கு சென்று கஃபதுல்லாஹ்வைச் சுற்றி வந்து மூன்று நாட்கள் மக்காவில் தங்கியிருந்து தொழுகை நடத்தினார்கள்.

இஸ்லாத்துடைய உயர்வையும், கண்ணியத்தையும் மக்கள் விளங்கிக் கொள்வதற்கு இது ஒரு வாய்ப்பாக அமைந்தது.

5. அரபு நாட்டிலிருந்த வேறு சிறு கூட்டங்களில் சிலர் மக்காவாசிகளோடும் சிலர் மதீனா வாசிகளோடும் இணைந்து கொண்டார்கள்.

## 3. அரசர்களுக்கும், ஆளுநர்களுக்கும் கடிதம்

ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு பின்னர் நபி (ஸல்) அவர்கள் பல அரசர்களுக்கு கடிதம் எழுதினார்கள். கடிதத்தை உறையிலிட்டு அதில் முத்திரையிட்டு தூதுவர்களிடம் கொடுத்து அனுப்பினார்கள். **முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்** என்று எழுதப்பட்ட முத்திரை மோதிரமும் செய்துக் கொண்டார்கள்.

**1. ரோம்நாட்டுமன்னருக்குக்கடிதம்:-**

ரோம் நாட்டு மன்னர்கள் **கைஸர்** ceasar என்று அழைக்கப்படுவார்கள். அப்போதைய ரோம் நாட்டு மன்னராகிய **ஹிர்கல்** (Hircules) என்பவருக்கு நபி (ஸல்) கடிதம் எழுதினார்கள். அவர் ஏற்கனவே முன் சென்ற வேதங்களை கற்றறிந்த அறிஞராக இருந்தார்.

எனவே இப்படி ஒரு இறுதி நபி வருவார் என்று அவர் தெரிந்து வைத்திருந்தார். அங்கிருந்த மக்காவாசிகளிடம் நபி பற்றி நன்கு விசாரித்து தெரிந்து கொண்டார். தானும்

முஸ்லிமாக வேண்டுமென்று விரும்பினார்.

ஆனால் அவர் சபையிலிருந்த மந்திரிகளும் படைத்தளபதிகளும், மதகுருமார்களும் எதிர்த்தார்கள். எனவே அவர் இஸ்லாத்தை ஏற்கவில்லை. கடிதம் கொண்டு வந்த தூதரை கண்ணியப்படுத்தி அன்பளிப்பு கொடுத்து அனுப்பி வைத்தார்.

**2.ஹபஷாமன்னர்நஜ்ஜாஷிக்குக்கடிதம்**

ஹபஷா நாட்டு மன்னர்கள் "நஜ்ஜாஷி" என்று அழைக்கப்படுவார்கள். அந்த நேரத்தில் ஹபஷா நாட்டை "அஸ்ஹமா" என்ற நஜ்ஜாஷி ஆட்சி செய்து வந்தார். அவருக்கும் இஸ்லாத்தை ஏற்கும்படி நபி (ஸல்) அவர்கள் கடிதம் எழுதினார்கள்.

அந்த கடிதத்தை பெரிதும் மதித்த நஜ்ஜாஷி மன்னர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார். அவரும் நபி (ஸல்) அவர்களுக்கு பதில் கடிதம் எழுதினார். ஹிஜ்ரி 9ல் நஜ்ஜாஷி மன்னர் வபாத் ஆனார்.

அவர் இறந்த செய்தியை மதீனாவில் அறிவித்த நபி (ஸல்) அவர்கள் அவருக்கு ஜனாஸா தொழுகையும் நடத்தினார்கள்.

**3.மிஸ்ர் (egypt) நாட்டுமன்னருக்குகடிதம்**

மிஸ்ர் (egypt) நாட்டு மன்னர்கள் "**முகவ்கிஸ்**" என்று அழைக்கப்படுவார்கள். அதுசமயம் மன்னராக இருந்த **ஜுரைஜ்** என்பவருக்கும் நபி (ஸல்) அவர்கள் இஸ்லாத்திற்கு வருமாறு கடிதம் எழுதினார்கள். கடிதத்தை வாங்கி மிகவும் கண்ணியப்படுத்திய மன்னர்.

நபி (ஸல்) அவர்களுக்கு பதில் கடிதமும், அன்பளிப்பு களும் அனுப்பி வைத்தார்கள். ஆனால் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளவில்லை.

**பாரசீகநாட்டுமன்னருக்குக்கடிதம்:-**

பாரசீக நாட்டு மன்னர்கள் **கிஸ்ரா** என்று அழைக்கப் படுவார்கள். அது சமயம் **குஸ்ரு பர்வேஜ்** என்ற மன்னர் ஆட்சி செய்து வந்தார். அவருக்கும் நபி (ஸல்) அவர்கள் கடிதம் எழுதினார்கள். ஆனால் அவரோ கடிதத்தை கிழித்தெறிந்து எனது அடிமை எனக்கு கடிதம் எழுதுவதா? என்று திமிராகச் சொன்னான். இந்தச் செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு வந்த பொழுது அல்லாஹ் அவனது ஆட்சியை கிழித்தெறியட்டும் என்று நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

அதே போன்று கொஞ்ச நாட்களுக்குப் பின்பு அந்த கிஸ்ரா மன்னனின் மகன் **ஷீர்வைஹி** என்பவன் தன் தந்தையை கொன்று விட்டு தான் அரசனாகிவிட்டான். பிற்காலத்தில் கலிபாக்களின் ஆட்சியிலே பாரசீக நாடு முழுவதும் இஸ்லாமியர்களின் கையிலே வந்து விட்டது.

இவ்வாறே **பஹ்ரைன், யமாமா, சிரியா, ஓமன்** நாட்டு மன்னர்களுக்கும் நபி (ஸல்) அவர்கள் கடிதம் எழுதினார்கள். மேலும் பல அரபுநாட்டுத் தலைவர்களுக்கும் தபால் எழுதி னார்கள். அவர்களில் சிலரே இஸ்லாத்தை ஏற்றுக் கொண் டார்கள்.

## 4. கைபர் போர்

**பைஅத்துர் ரிழ்வானில்** நபி (ஸல்) அவர்களிடத்தில் மரத்திற்கு கீழே ஸஹாபாக்கள் ஒப்பந்தம் செய்த பொழுது விரைவில் அவர்களுக்கு மிகப் பெரிய வெற்றியை தருவதா கவும், நிறைய கனிமத் பொருட்களைத் தருவதாகவும் அல்லாஹ் வாக்களித்தான். அவ்வாறே அல்லாஹுத்தஆலா கைபர் போரில் முஸ்லிம்களுக்கு மிகப் பெரிய வெற்றியைக் கொடுத்தான்.

**கைபர்** என்பது மதீனாவுக்கு வடக்கில் 80 மைல்

தொலைவிலுள்ள ஒரு ஊராகும். அங்கே பலம் வாய்ந்த எட்டு கோட்டைகளைக் கட்டி யூதர்கள் வசித்து வந்தார்கள். இவர்கள் தான் அகழ்ப்போருக்கு குரைஷிகளை தூண்டிவிட்டார்கள்.

மேலும் பனு குரைளா யூதர்கள் ஒப்பந்தத்தை முறிப்பதற்கும் தூண்டிவிட்டார்கள். மதீனாவில் வாழ்கின்ற முனாபிக்குகளையும் தொடர்பு கொண்டு முஸ்லிம்களுக்கு எதிராக சதி செய்து வந்தார்கள்.

கத்பான் கூட்டத்தாருடன் சேர்ந்து முஸ்லிம்களின் மீது மீண்டும் போர் தொடுப்பதற்கு ஏற்பாடு செய்தார்கள். எனவே இவர்கள் இருப்பது எப்போதும் முஸ்லிம்களுக்கு ஆபத்து என்பதை அறிந்த நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரி 7 முஹர்ரம் மாதம் மதீனாவிலிருந்து படை நடத்தி கைபரை நோக்கி சென்றார்கள்.

ஹுதைபிய்யாவில் பங்கேற்ற 1400 ஸஹாபாக்களை மட்டுமே இந்தப் போரில் அழைத்துக் கொண்டார்கள். முஸ்லிம்களுக்கு பணிவிடை செய்வதற்காக உணவு, தண்ணீர் மற்றும் மருந்துகள் தயார் செய்வதற்காக 20 பெண்களும் இந்தப் படையில் சேர்ந்து வந்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கைபருக்கு சென்று இரவு அங்கே தங்கினார்கள். “நாளை காலை அல்லாஹ்வும், ரஸூலும் நேசிக்கின்ற ஒருவரிடம் கொடியை கொடுப்பேன். அல்லாஹ் அவர்களின் கையில் வெற்றியை அளிப்பான்” என்று கூறினார்கள்.

மறுநாள் காலை ஸஹாபாக்கள் அனைவரும் அந்தக் கொடியை நாயகம் (ஸல்) அவர்கள் தன்னிடம் தரவேண்டுமே என்ற ஆசையில் நபியவர்கள் முன்வந்து அமர்ந்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் “**அலி (ரலி)** எங்கே?” என்று விசாரித்

-தார்கள். அவர்கள் கண்வலியால் சிரமப்படுவதாக கூறி -னார்கள். அவர்களை அழைத்து வரச் சொன்ன நாயகம் (ஸல்) அவர்கள் தங்களது புனித உமிழ்நீரை அவர்களின் கண்களில் தடவி துஆச் செய்தார்கள். உடனே கண் முற்றிலும் குணமாகி விட்டது.

அவர்களிடம் கொடியைக் கொடுத்து "நீங்கள் அவர்களை முதலில் இஸ்லாத்தின் பக்கம் அழையுங்கள் உங்களைக் கொண்டு ஒரு மனிதனுக்கு அல்லாஹ் நல்வழிகாட்டினால் அது உயர்ந்த ஒட்டகங்கள் பலவற்றை பெறுவதைவிட மேலானது. அவர்கள் இஸ்லாத்தை ஏற்க மறுத்து உங்களோடு சண்டையிட வந்தால் மட்டுமே நீங்கள் சண்டையிடுங்கள்" என்று நபி (ஸல்) கூறி அனுப்பினர்.

அலி (ரலி) அவர்கள் கைபரின் முதல் கோட்டையை நெருங்கிய போது அக்கோட்டையின் தலைவனாகிய **மர்ஹப்** என்பவன் வெளியே வந்தான். அவன் ஒருவனே ஆயிரம் வீரர்களுக்கு சமமானவன் என்று கூறப்பட்டது. அவனோடு அலி (ரலி) அவர்கள் மோதி வெட்டி வீழ்த்தினார்கள்.

மர்ஹபின் தம்பி **யாசிர்** என்பவனை **ஜுபைர் (ரலி)** அவர்கள் வெட்டி வீழ்த்தினார்கள். ஓரிரு நாட்கள் போர் நடந்தது. கடைசியில் முஸ்லிம்களுக்கு அல்லாஹ் வெற்றியை கொடுத்தான். அந்த கோட்டையிலிருந்து இரகசியமாக வெளியேறிய யூதர்கள் அதற்கடுத்த கோட்டையில் நுழைந்து கொண்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அந்த கோட்டையையும் முற்றுகை யிட்டு போர் புரிந்தார்கள். இவ்வாறாக ஒவ்வொரு கோட்டையாக முற்றுகையிட்டு போர் நடத்தி அனைத்து கோட்டைகளையும் வெற்றி பெற்றார்கள். **(படம் - 50)**

அதன் பின் அங்கிருந்த யஹூதிகள் தங்களை இங்கேயே வாழ அனுமதிக்க வேண்டுமென்றும் அதற்குப் பகரமாக

இங்கு விளையும் விளைச்சலில் பாதியை வரியாக செலுத்துவதாகவும் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அதை ஏற்றுக்கொண்டு அதற்கு பொறுப்புதாரியாக அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலி) அவர்களை நியமித்தார்கள். யஹூதிகளின் தலைவனாகிய ஹைய் இப்னு அக்தபின் மகள் சபிய்யா அவர்கள் இஸ்லாத்தின் மீது ஆசை கொண்டு முஸ்லிமாகி விட்டார்கள். அதன்பின் அவர்களை விடுதலை செய்து நபி (ஸல்) அவர்கள் திருமணம் செய்து கொண்டார்கள்.

சமாதான ஒப்பந்தத்திற்கு பின்னால் யஹூதிகள் நபி (ஸல்) அவர்களுக்கும், அவர்களின் தோழர்களுக்கும் விருந்து உணவு அளிக்க அனுமதி கேட்டார்கள். நபி (ஸல்) அவர்களும் அனுமதி கொடுத்தார்கள்.

அந்த அநியாயக்காரர்கள் உணவிலே விஷத்தை கலந்து விட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் ஒரு இறைச்சித் துண்டை எடுத்து வாயில் வைத்த போது "என்னில் விஷமிடப் பட்டள்ளது" என்றுஅந்த இறைச்சியே சொன்னது! உடனே நாயகம் (ஸல்) அவர்கள் அதனை துப்பிவிட்டார்கள். அந்த யஹூதிகளிடம் ஏன் இவ்வாறு செய்தீர்கள்? என்று கேட்டார்கள்.

அதற்கு அவர்கள் "நீங்கள் பொய்யராக இருந்தால் உங்களை கொன்று விட்டு நாங்கள் விடுதலை பெறலாம். நீங்கள் உண்மை நபியாக இருந்தால் உங்களை அல்லாஹ் காப்பாற்றிவிடுவான். அதனால் தான் விஷமிட்டோம்" என்று கூறினார்கள்.

இவ்வாறு சமாதான ஒப்பந்தத்திற்கு பின்பும் அந்த யஹூதிகளின் தீயகுணம் மாறவில்லை. இந்தப் போரில் முஸ்லிம்களின் தரப்பில் 19 பேரும், எதிரிகளின் தரப்பில் 93 பேரும் கொல்லப்பட்டார்கள்.

தோட்டம், துறவுகளை யஹூதிகளிடம் ஒப்படைத்து விட்டு மற்ற கனீமத் பொருள்களான ஆடு, மாடு போன்றவற்றை வீரர்களுக்கு பங்கிட்டு கொடுத்தார்கள்.

கைபர் வெற்றிக்குப் பின்பு **ஃபதக், வாதில்குரா, தைமா** போன்ற இடங்களில் வசித்து வந்த யூதர்களும் நபி (ஸல்) அவர்களிடம் வந்துசமாதான ஒப்பந்தம் செய்து கொண் -டார்கள். அதன் மூலம் முஸ்லிம்களுக்கு பல கனீமத் பொருள்களும் கிடைத்தது. ஹிஜ்ரி 7ம் வருடம் நபி (ஸல்) அவர்கள் உம்ராவை களா செய்வதற்காக வேண்டி மக்காவிற்கு சென்றார்கள்.

மக்கா வாசிகள் அவரவர் வீட்டிலே சென்று கதவை அடைத்து கொண்டார்கள். சிலர் மலைகளுக்கு சென்று விட்டார்கள். மூன்று நாட்கள் தங்கியிருந்து உம்ராவை நிறைவேற்றி விட்டு மதீனாவிற்குத் திரும்பினார்கள்.

## 5. மூத்தாப் போர்

இந்தப் போர் ஹிஜ்ரி -8 ஜமாதுல் அவ்வல் மாதத்திலே நடந்தது. நபி (ஸல்) அவர்கள் **ஹாரிஸ் இப்னு உமைர் (ரலி)** அவர்களிடம் **புஸ்ரா** நாட்டு மன்னருக்கு கடிதம் கொடுத்து அனுப்பினார்கள். வழியில் பல்கா மாநிலத்தின் கவர்னராக இருந்த **ஷுரஹ்பீல்** என்ற கஸ்ஸானிய தலைவன் அவர்களைக் கைது செய்து கொன்று விட்டான்.

தூதர்களை கொலை செய்வது அக்காலத்தில் மிகப் பெரும் குற்றமாக இருந்தது. மேலும் அது போருக்கு அழைப்பதாகவும் கருதப்பட்டது. எனவே நபி (ஸல்) அவர்கள் 3000 பேர் கொண்ட ஒரு படையை தயார் செய்து அவர்களுக்கு தலைவராக "**ஜைதுபின்ஹாரிஸா**" (ரலி) வை நியமித்தார்கள்.

போரில் ஜைது (ரலி) அவர்கள் வீரமரணம் அடைந்தால் **ஜஃபர் இப்னு அபீதாலிப்** (ரலி) அவர்கள் தலைவராக

இருப்பார்கள். அவர்களும் ஷஹீத் ஆகிவிட்டால் **அப்துல்லாஹ் இப்னு ரவாஹா** (ரலி) அவர்கள் பொறுப் பேற்பார்கள் என்று நாயகம் (ஸல்) அவர்கள் கூறி அனுப்பி வைத்தார்கள்.

**ஷாம்** நாட்டை நோக்கி பயணம் சென்ற இஸ்லாமியர்கள் **மூத்தா** என்ற இடத்திலே வந்து தங்கிக் கொண்டார்கள். எதிரிகளோ ரோமாபுரி மன்னர் **ஹிர்கலின்** தலைமையில் இரண்டு இலட்சம் பேர் வந்திருந்தார்கள்.

இரண்டு இலட்சம் பேர் கொண்ட படையை வெறும் 3000 பேர் மட்டும் கொண்ட சிறிய படை எதிர்த்து நின்று வெற்றி பெற முடியுமா! நாம் சண்டையிடலாமா? வேண்டாமா? அல்லது நபி (ஸல்) அவர்களுக்கு செய்தி அனுப்பி அவர்கள் உதவிப்படையை அனுப்பும் வரை காத்திருக்கலாமா என்று ஸஹாபாக்கள் ஆலோசனை செய்தார்கள்.

அப்போது அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலி) அவர்கள் “நாம் மார்க்கத்திற்காக போர் புரிய வந்து விட்டோம். இதில் பின்வாங்கக்கூடாது. நமது எண்ணிக்கையையும் நமது பலத்தையும் பார்க்க வேண்டாம். அல்லாஹ்வை நம்பிப் போர் செய்வோம். வெற்றி அல்லது வீரமரணம் இரண்டில் ஒன்றை அல்லாஹ் நமக்கு வழங்குவான்” என்று கூறினார்கள்.

அதைக் கேட்ட மக்கள் அனைவரும் போருக்கு தயாரா -னார்கள். இரு படைகளுக்கும் கடுமையான சண்டை நடந்தது. ஜைது (ரலி) அவர்கள் ஷஹீத் ஆனார்கள். அதன் பின்னர் தலைமையேற்ற ஜாபிர் (ரலி) அவர்களும் ஷஹீது ஆனார்கள்.

அதன்பின் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) அவர்களும் ஷஹீத் ஆனார்கள். அதன்பின் மக்கள் காலித் பின் வலீத் (ரலி) அவர்களை தலைவராக தேர்ந்தெடுத்தார்கள்.

காலித் (ரலி) அவர்கள் மிகக்கடுமையாக போர் செய்த வண்ணம் முஸ்லிம்களை கொஞ்சம் கொஞ்சமாக ஒரே இடத்தில் ஒன்று சேர செய்தார்கள். முஸ்லிம்களின் எண்ணிக்கை குறைவாக இருந்தாலும் அவர்களின் பலமான தாக்குதலால் எதிரிகள் நிலைகுலைந்து போனார்கள். அவர்களிலே நிறைய பேர் கொலை செய்யப்பட்டார்கள்.

எனவே போரைத் தொடர முடியாத ரோமர்களும் ஒரு பக்கம் ஒதுங்கிச் சென்றார்கள். இவ்வாறாக எந்த முடிவும் இல்லாமல் போர் முடிவடைந்தது. முஸ்லிம்களின் பக்கம் 12 பேர் கொல்லப்பட்டார்கள். பின்னர் பாதுகாப்பாக முஸ்லிம்கள் மதீனா வந்து சேர்ந்தார்கள்.

இந்தப் போரில் முஸ்லிம்களுக்கு வெற்றி கிடைக்கா விட்டாலும் உலகில் அந்தக் காலத்தில் யாரும் எதிர்க்க முடியாத மாபெரும் வல்லரசாக இருந்த ரோமர்களை முஸ்லிம்கள் எதிர்த்து சண்டையிட்டு பின்னர் பாதுகாப்பாக வீட்டிற்கு திரும்பி விட்டார்கள் என்ற செய்தி அரபு நாடெங்கும் பரவியது.

முஸ்லிம்களின் வீரத்தையும், பலத்தையும் எண்ணி அரபு மக்கள் ஆச்சரியமடைந்தார்கள். எனவே கூட்டம் கூட்டமாக மக்கள் இஸ்லாத்தில் இணைய ஆரம்பித்தார்கள். அந்த வகையில் இது ஒரு வெற்றிகரமான போராகவே அல்லாஹ் ஆக்கிவைத்தான். **(படம் - 63)**

பகுதி – 7

# மக்கா வெற்றியும் இறுதி ஹஜ்ஜும்

## 1. மக்கா வெற்றி

மக்கா வெற்றி இஸ்லாத்தின் மிகப்பெரிய வெற்றியாகும். இது ஹிஜ்ரி 8- ரமலான் மாதம் நடைபெற்றது. ஹிஜ்ரி 6ல் நடைபெற்ற ஹுதைபிய்யா உடன்படிக்கையில் முஸ்லிம் களும், குரைஷிகளும் 10 வருடம் போர் செய்யக் கூடாதென்று ஒப்பந்தம் செய்தனர்.

இந்த ஒப்பந்தத்தில் மற்ற அரபுகூட்டத்தார்கள் முஸ்லிம்களுடன் அல்லது குரைஷிகளுடன் சேர்ந்து கொள்ளலாம்.

அவ்வாறு சேர்ந்து கொண்டவர்களிடமும் சண்டை செய்யக்கூடாது. சண்டை செய்ய உதவியும் செய்யக்கூடாது என்று ஒப்பந்தம் செய்தார்கள்.

அந்த ஒப்பந்தப்படி **குஜாஆ** கூட்டத்தார்கள் நபியுடன் சேர்ந்து கொண்டார்கள். **பக்ர்** கூட்டத்தார்கள் குறைஷிகளுடன் சேர்ந்து கொண்டார்கள்.

ஹிஜ்ரி 8 ஷஅபான் மாதம் பக்ர் கூட்டத்தார்கள் குஜாஆ கூட்டத்தாரைத் தாக்கினார்கள். குரைஷிகள் ஆட்களையும், ஆயுதங்களையும் அனுப்பி உதவி செய்தார்கள்.

குஜாஆ கிளையினர்கள் பலபேர் கொலை செய்யப் பட்டார்கள். இவ்வாறு குரைஷிகள் ஒப்பந்தத்தை முறித்து விட்டார்கள்.

குஜாஆ கிளையினர் மதீனாவுக்கு வந்து நபி (ஸல்) அவர்களிடத்தில் அவர்களுக்கு நிகழ்ந்த கொடுமைகளை வர்ணித்து கூறினார்கள். இதைக் கேட்ட நபி (ஸல்) அவர்களும், முஸ்லிம்களும் மிகவும் கோபமடைந்தார்கள். 'உங்களுக்கு உதவி செய்யப்படும்' என்று அவர்களுக்கு ஆறுதல் கூறினார்கள்.

தாங்கள் செய்த இந்த கொடிய செயலுக்கு நபி (ஸல்) அவர்கள் பதில் நடவடிக்கை எடுப்பார்கள் என்று பயந்த குரைஷிகள் நபியவர்களிடம் சமாதானம் செய்வதற்காக தங்கள் தலைவர் அபூசுப்யானை மதீனாவுக்கு அனுப்பி வைத்தார்கள்.

ஆனால் நபி (ஸல்) அவர்கள் அவரோடு பேசவும் இல்லை. மீண்டும் ஒப்பந்தம் செய்ய முன்வரவில்லை. அவர் ஏமாற்றத்தோடு மக்கா திரும்பினார். அதன்பின் நபி (ஸல்) அவர்கள் மக்காவிற்கு படையெடுத்து செல்ல முஸ்லிம்களை தயாராகும்படி சொன்னார்கள்.

இந்த செய்தி மக்காவாசிகளுக்கு அரவே தெரியாமல் இரகசியமாக படை தயாரானது. ஹிஜ்ரி 8 ரமலான் மாதம் நபி (ஸல்) அவர்கள் 10,000 ஸஹாபாக்களோடு மதீனாவிலிருந்து மக்காவை நோக்கிக் கிளம்பினார்கள்.

மக்கா செல்லும் வழியில் நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்கள் தங்கள் குடும்பத்தோடு வந்து இஸ்லாத்தை ஏற்று நபியவர்களோடு சேர்ந்து கொண்டார்கள்.

படைகள் மக்காவை நெருங்கியதும் மக்காவிற்கு அருகிலிருந்த "**மர்ருள்ளஹ்ரான்**" என்ற மலைப்பகுதியில்

தங்கினார்கள். அங்கே இரவில் ஒவ்வொரு தோழரும் தனித்தனியாக நெருப்பு மூட்டி சமைக்கும் படி நபி (ஸல்) அவர்கள் கூறிளார்கள்.

பொதுவாக போரில் பத்து பேர் சேர்ந்து ஒரு நெருப்பை மூட்டி சமைப்பார்கள். நெருப்பை வைத்து படைவீரர்களின் எண்ணிக்கையை மக்கள் கணக்கிடுவார்கள். இவ்வளவு நெருப்பை பார்த்த மக்காவாசிகள் மிகப்பெரும் அதிர்ச்சி அடைந்தார்கள். இது யாருடைய படை? எங்கிருந்து வந்தது? என்று தெரியாமல் பயத்துடன் பார்த்தார்கள்.

மக்காவின் தலைவர் **அபூ சுப்யான்** மக்காவை விட்டு வெளியேறி செய்திகளை அறிந்து வர கிளம்பினார். வழியில் அப்பாஸ் (ரலி) அவர்களை சந்தித்து விசாரித்தார். இது ரஸூலுல்லாஹ் (ஸல்) அவர்களின் படை என்று கூறிய அப்பாஸ் (ரலி) அவர்கள் அபூசுப்யானை அழைத்துக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடத்தில் வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் "அபூசுப்யானே! அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று அறிந்து கொள்ள உங்களுக்கு நேரம் வரவில்லையா?" என்று கேட்டார்கள்.

அதற்கு அபூசுப்யான் "அப்படி இன்னொரு இறைவன் இருந்திருந்தால் இப்பொழுது எனக்கு உதவி செய்திருப் -பானே. ஆனால் இப்பொழுது எனக்கு யாருமில்லையே" என்று கூறி கலிமா சொல்லி முஸ்லிமாகிவிட்டார்.

நபி (ஸல்) அவர்கள் "நாங்கள் மக்காவை நோக்கி வருகிறோம். யாரெல்லாம் அபூசுப்யான் வீட்டில் நுழைந்து கொண்டார்களோ அவர்களின் உயிர் பாதுகாக்கப் படும். மஸ்ஜிதுல் ஹராமில் நுழைந்து கொண்டாலும் பாதுகாக்கப்படுவார். யார் தனது வீட்டில் சென்று கதவை தாழிட்டுக் கொண்டார்களோ அவர்களும் பாதுகாக்கப் படுவார்கள்" என்று அறிவிப்பு செய்யும்படி அபூசுப்யானிடம் கூறினார்கள்.

அவரும் மக்காவிற்கு சென்று அறிவித்தார். மக்கள் அனைவரும் அவரவர் வீடுகளுக்குச் சென்று கதவை தாழிட்டுக் கொண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் தங்கள் படையை பல பிரிவுகளாக பிரித்து மக்காவை சுற்றியுள்ள அனைத்து வாசல் வழியாகவும் ஒவ்வொரு படைப்பிரிவு நுழையும்படி செய்தார்கள்.

நபி (ஸல்) அவர்களும் மிகவும் பணிவோடு **சூரத்துல் ஃபதஹ்** ஓதியவர்களாக மக்காவில் நுழைந்தார்கள். ஹிஜ்ரி 8 ரமலான் பிறை 20 வெள்ளிக்கிழமை காலையில் நபி (ஸல்) அவர்கள் கஃபாவை சென்றடைந்தார்கள்.

மக்காவாசிகள் யாரும் சண்டைபோடவில்லை. ஹாலித் (ரலி) அவர்களின் தலைமையில் மக்காவில் நுழைந்த ஒரே ஒரு படையை மட்டும் சில குரைஷி இளைஞர்கள் எதிர்த் -தார்கள். அவர்களும் வெட்டி வீழ்த்தப்பட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் கஃபாவிற்கு சென்று ஹஜருல் அஸ்வத் கல்லை முத்தமிட்டு கஃபாவைத் தவாப் செய்தார்கள்.

கஃபாவை சுற்றி வைக்கப்பட்டிருந்த **360** சிலைகளையும் அகற்றினார்கள்.

“உண்மை வந்தது. பொய் அழிந்தது. நிச்சயமாக பொய் அழிந்தே தீரும்” என்ற திருவசனத்தை ஓதினார்கள். அதன் பின் கஃபாவின் சாவிக்கு பொறுப்புதாரியான **உஸ்மான் இப்னுதல்ஹா**விடம் சாவியை பெற்று கஃபாவில் நுழைந்து தொழுதார்கள்.

பின்பு அங்கிருந்த மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்பதையும் இந்த மகத்தான வெற்றியை அல்லாஹ்தான் கொடுத்தான் என்பதையும் எடுத்துரைத்தார்கள்.

பிறப்பால் உயர்வு, தாழ்வு இல்லை. இறையச்சத்தால் தான் ஒரு மனிதன் மேன்மை அடைகிறான் என்று கூறி

-னார்கள். மேலும் இன்று மக்காவாசிகள் செய்த கொடுமை -கள் மன்னிக்கப்படுகின்றன. யாரையும் பழிவாங்குவதில்லை என்று நற்செய்தி கூறினார்கள்.

பின்பு கஃபாவின் சாவியை அதே உஸ்மான் இப்னு தல்ஹாவிடம் ஒப்படைத்து "காலம் காலமாக இது உங்கள் குடும்பத்தினரிடம் தான் இருக்கும். அநியாயக்காரன் தவிர வேறு யாரும் இந்த சாவியை உங்களிடமிருந்து பறிக்க மாட்டார்கள்" என்று கூறினார்கள். இன்று வரை அவர்களுடைய வழிதோன்றல்கள் தான் கஃபாவின் சாவிக்கு பொறுப்புதாரியாக இருக்கிறார்கள்.

அதன் பின் தொழுகை நேரம் வந்തதும் கஃபதுல்லாஹ் வின் மீது ஏறி பிலால் (ரலி) அவர்களை பாங்கு சொல்ல வைத்தார்கள்.

இவ்வளவு பெரிய வெற்றியை அல்லாஹ் கொடுத்ததற்கு நன்றி செலுத்தும் விதமாக உம்மு ஹானி (ரலி) அவர்களின் வீட்டிற்குச் சென்று 8 ரக்அத்துகள் தொழுதார்கள். அதன்பின் மக்காவாசிகள் ஆண்களும், பெண்களும் கூட்டம் கூட்டமாக வந்து நபி (ஸல்) அவர்களிடத்திலே கலிமா சொல்லி இஸ்லாத்தில் இணைந்தார்கள்.

அன்ஸாரி ஸஹாபாக்களோ "நபி (ஸல்) அவர்கள் தாங்கள் பிறந்து வளர்ந்த ஊருக்கே வந்து விட்டார்கள். இனிமேல் மதீனாவிற்கு வருவார்களா? இல்லையா என்று தெரியவில்லையே" என்று பேசிக் கொண்டார்கள்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள் "அன்ஸாரிகளே! கவலைப் படாதீர்கள் என்வாழ்வும், மரணமும் உங்களுடன் தான்" என்று கூறினார்கள். இதைக் கேட்ட அன்ஸாரிகள் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள்.

அதன்பின்பு 19 நாட்கள் மக்காவில் தங்கியிருந்தார்கள். மக்களுக்கு மார்க்க சட்டங்களை எடுத்துரைத்தார்கள்.

# ௨. ஹுனைன் போர்

மக்காவிற்கு அருகில் **ஹவாஜின், ஸகீஃப்** என்ற இரண்டு மிகப்பெரிய கூட்டத்தினர்கள் வசித்து வந்தார்கள். மக்காவை முஸ்லிம்கள் வெற்றி கொண்ட செய்தியை அவர் கள் கேள்விப்பட்டு அதிர்ச்சி அடைந்தார்கள். முஸ்லிம் களின் வளர்ச்சியை தடுக்கத் திட்டமிட்டார்கள். அதற்காக முஸ்லிம்களின் மீது போர் தொடுக்கவும் அவர்கள் தயாரா னார்கள்.

ஹவாஜின் கூட்டத்தின் தலைவராக **மாலிக் இப்னு அவ்ஃப்** என்பவர் இருந்தார். அவர் நாம் போருக்கு செல்லும் போது நமது மனைவி, மக்கள், ஆடு, மாடு பொருட்கள் அனைத்தையும் கொண்டு செல்ல வேண்டும்.

அப்போது தான் இவர்களை பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணத்தில் ஒவ்வொருவரும் கடுமையாக போர் புரிவார்கள் என்று கூறினார். அதன்படியே அனைவரும் ஆடு, மாடு , செல்வங்களை எடுத்துக் கொண்டு மக்காவை நோக்கி வந்தார்கள்.

இந்த செய்தியை கேள்விப்பட்ட நபி (ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்து வந்த 10, 000 ஸஹாபாக்கள், மக்காவிலே முஸ்லீமான 2000 புதிய முஸ்லிம்கள் மொத்தம் 12000 பேர் களோடு சேர்ந்து ஹுனைன் பள்ளத்தாக்கை அடைந் தனர்.

அது ஷவ்வால் மாதம் பிறை 10ஆக இருந்தது. அந்த ஹுனைன் பள்ளத்தாக்கிற்கு ஏற்கனவே வந்து விட்ட எதிரிகள் இரு பக்கமும் இருந்த மலைகளில் ஒளிந்து கொண் டார்கள். அதை முஸ்லிம்கள் அறியவில்லை.

முஸ்லிம்களில் சிலர் "நாம் இவ்வளவு பெரும் படையாக வந்திருக்கிறோம். நம்மை யாராலும் வெற்றி கொள்ள முடியாது" என்று பெருமையோடு பேசிக் கொண்டார்கள்.

மறுநாள் காலை எதிரிகள் நாலாப்புறங்களிலிருந்தும்

முஸ்லிம்களை நோக்கி அம்பு எறிய ஆரம்பித்தார்கள். வானத்திலிருந்து பெய்யும் மழைப்போல் அம்பு மழைப் பொழிந்தது. திடீர் தாக்குதலை எதிர்பாராத முஸ்லிம்கள் சிதறி ஓடினார்கள். **(படம் - 51)**

நபி (ஸல்) அவர்கள் மட்டும் தங்களின் கோவேறு கழுதையில் அமர்ந்தவர்களாக,

“**அனன்நபிய்யுலாகதிப் அனப்னு அப்துல் முத்தலிப்**” “நான் அல்லாஹ்வின் நபி இது பொய் இல்லை. இன்னும் நான் அப்துல் முத்தலிபின் மகன்” என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

முஸ்லிம்களில் வெறும் 12 பேர் மட்டுமே நபி (ஸல்) அவர்களோடு நின்று கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் தங்கள் அருகிலிருந்த அப்பாஸ் (ரலி) அவர்களிடம் உரத்த குரலில் தன்னை நோக்கி ஸஹாபாக்களை அழைக்கும் படி கூறினார்கள்.

அவர்களும் அவ்வாறே அழைத்தார்கள். அந்த சப்தத்தை கேட்டு அனைத்து ஸஹாபாக்களும் திரும்ப வந்தார்கள். கடும் போர் ஆரம்பம் ஆனது. நபி (ஸல்) அவர்கள் ஒரு கைப்பிடி மண்ணை எடுத்து எதிரிகளை நோக்கி வீசினார்கள்.

அது அனைத்து எதிரிகளின் கண்களிலும் பட்டது. எதிரிகள் பின்வாங்க ஆரம்பித்தார்கள். அல்லாஹுத்தஆலா முஸ்லிம்களுக்கு மிகப்பெரிய வெற்றியை கொடுத்தான்.

இதைப்பற்றி அல்லாஹுத்தஆலா குர்ஆனில் சொல்லும் போது “அல்லாஹுத்தஆலா பல போர்களில் உங்களுடைய எண்ணிக்கை குறைவாக இருந்தும் உங்களுக்கு வெற்றியை கொடுத்தான்”. ஹுனைன் போரன்று உங்கள் எண்ணிக்கை அதிகமாக இருப்பதைக் கண்டு நீங்கள் பெருமை கொண்ட காரணத்தால் அல்லாஹுத்தஆலா உங்களை புறமுதுகிட்டு

ஓடச் செய்தான். பின்னர் உங்களை மன்னித்து அல்லாஹ் தன் உதவியை இறக்கி உங்களுக்கு வெற்றியைக் கொடுத்தான்" என்ற கருத்துள்ள வசனத்தை இறக்கி வைத்தான்.

அதாவது நம் படை சிறியதோ, பெரியதோ அல்லாஹ் மீதுதான் நம்பிக்கை வைக்க வேண்டும். நமது பலத்தை நம்பக் கூடாது என்ற படிப்பினையை அல்லாஹ் கொடுத்தான்.

இந்தப் போரில் முஸ்லிம்களுக்கு நிறைய கனீமத் பொருட்கள் கிடைத்தது. சுமார் 6000 அடிமைகள் 24,000 ஒட்டகங்கள், 40,000 ஆடுகள் மேலும் நிறைய வெள்ளிக் காசுகள் கிடைத்தது.

## 3. தாயிஃப் போர்

ஹுனைன் போரில் தப்பிப்பிழைத்த எதிரிகள் பலரும் **தாயிஃப்** கோட்டைக்குள் சென்று ஒளிந்து கொண்டார்கள். மேலும் கோட்டையுடைய கதவையும் அடைத்துக் கொண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் அந்தக் கோட்டையை முற்றுகையிட்டார்கள். இருபடையினரும் அம்பெறிந்து சண்டையிட்டு கொண்டார்கள். 20 நாட்கள் வரை சண்டை தொடர்ந்தது. சுமார் 12 முஸ்லிம்கள் ஷஹீத் ஆனார்கள்.

ஆனாலும் கோட்டையை வெற்றி பெற முடியவில்லை. எனவே நபி (ஸல்) அவர்கள் மேலும் நாட்களை செலவழிக்க விரும்பாமல் "யாஅல்லாஹ்! இந்த **ஸகீப்** கிளையினருக்கு நேர்வழி காட்டுவாயாக! அவர்களை என்னிடம் வரச் செய்வாயாக! என்று துஆ செய்து விட்டு படைகள் ஊருக்கு திரும்ப ஏற்பாடு செய்தார்கள்.

வரும் வழியில் '**ஜிஃரானா**' என்ற இடத்தில் நபி (ஸல்) அவர்கள் ஹுனைன் போரில் கிடைத்த கனீமத் பொருள்களை ஸஹாபாக்களுக்கு பங்கு வைத்துக் கொடுத்தார்கள்.

**(படம் - 52)**

பொருள்களை பங்குவைத்த பின்பு ஹவாஜின் கூட்டத்தார் நபி (ஸல்) அவர்களிடத்தில் வந்து “நாங்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்கிறோம். எங்கள் குடும்பத்தாரையும் எங்கள் பொருள்களையும் திரும்பக் கொடுத்து விடுங்கள்” என்று கேட்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் “10 நாட்கள் வரை நீங்கள் வருவதை எதிர்பார்த்தேன். ஆனால் நீங்கள் தாமதமாக இப்போது தான் வந்துள்ளீர்கள். ஆகவே உங்களது குடும்பத்தினர்கள், பொருள்கள் ஏதேனும் ஒன்றை நாங்கள் திருப்பி தருகிறோம்” என்று சொன்னார்கள்.

அதற்கு அவர்கள் “எங்கள் குடும்பத்தினர்களை எங்களுக்கு திருப்பி தந்து விடுங்கள்” என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் ஸஹாபாக்களை அழைத்து “இதோ நமது சகோதரர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு நம்மிடம் வந்து விட்டார்கள். எனவே அவர்களின் குடும்பத்தினரை அவர்களிடம் திரும்ப ஒப்படைத்து விடுவோம்” என்று கூறினார்கள். அதை மகிழ்வோடு ஏற்றுக் கொண்ட ஸஹாபாக்கள் கைதிகள் அனைவரையும் திருப்பிக் கொடுத்து விட்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஜிஃரானாவிலே இஹ்ராம் அணிந்து மக்காவுக்கு வந்து உம்ராவை நிறைவேற்றினார்கள். பின்னர் மக்காவிலே **அத்தாப் இப்னு உஸைப்** (ரலி) என்பவரை ஆளுநராக நியமித்து விட்டு துல்காயிதா பிறை 24ல் மதீனா விற்கு திரும்பி விட்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மதீனா திரும்பிய பின்பு தாயிஃப் மக்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடத்திலே ஒரு குழுவை அனுப்பி வைத்தார்கள்.

அவர்கள் நபி (ஸல்) அவர்களிடத்தில் வந்து தனது கூட்டத்தார்கள் அனைவரும் இஸ்லாத்தை ஏற்றுக் கொள் வதாக அறிவித்தார்கள்.

இவ்வாறு முழு தாயிஃப் மக்களும் போரின்றி சமாதான மாகவே இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள். அல்லாஹுத் தஆலா நபி (ஸல்) அவர்களின் துஆவை ஏற்றுக் கொண்டான்.

## 4. தபூக் போர்

### [ஹிஜ்ரி 9, ரஜப் மாதம்]

மக்கா வெற்றியடைந்த பின் இஸ்லாத்தின் உயர்வையும், அதன் உண்மையையும் அரபு மக்கள் அறிந்து கொண் -டார்கள். எனவே அரபு நாட்டின் பல பாகங்களிலிருந்தும் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

ஸஹாபாக்களும் பல ஊர்களுக்கு சென்று இஸ்லாத்தை அறிமுகப்படுத்தி அவர்களை இஸ்லாத்தில் இணைத்தார்கள். அரபுநாட்டில் முஸ்லிம்களை நேரடியாக எதிரிப்பதற்கு இப்போது யாரும் தயாராக இல்லை.

அக்காலத்தில் உலகில் மாபெரும் வல்லரசாக ரோமாபுரி பேரரசு மற்றும் பாரசீகப் பேரரசுஇரண்டும் திகழ்ந்தது. இவ்விரண்டு வல்லரசுகளையும் யாராலும் எதிர்க்க முடியாது என்று மக்கள் பேசிக் கொண்டார்கள்.

அப்படி யாரும் அவர்களை எதிர்த்தால் சுத்தமாக அழித்து ஒழித்து விடுவார்கள். எனவே அவர்களின் பெயர்களைக் கேட்டால் மக்கள் நடுங்குவார்கள். ஆனால் நபி (ஸல்) அவர்கள் அந்த ரோமர்களை எதிர்த்து படையை அனுப்பி வைத்தார்கள்.

3000 பேர் கொண்ட முஸ்லிம் படை 2 இலட்சம் பேர் கொண்ட ரோமர்களை **மூத்தா** போரில் சந்தித்தார்கள். கடும் போர் நடந்தது. ரோமர்களுக்கும் நிறைய சேதம் ஏற்பட்டது. எந்த வெற்றி தோல்வியுமின்றி போர் முடிந்தது. முஸ்லிம்கள் கண்ணியமாக மதீனாவிற்குத் திரும்பி

விட்டார்கள்.

இந்தப் போர் பற்றிய செய்தி உலகெங்கும் பரவிய போது அது ரோமர்களுக்கு மிகப்பெரிய கேவலமாக இருந்தது. ஒரு சிறிய படையிடம் தோல்வியுற்றுத் திரும்பிய தாக ரோமர் களை மக்கள் கேலி செய்தார்கள். எனவே இதற்காக பழி வாங்க வேண்டுமென்று ரோமாபுரி மன்னன் ஹிர்கல் மிகப் -பெரிய படையை தயார் செய்தான்.

அந்தப் படை எந்த நேரமும் மதீனாவை தாக்குவதற்கு தயாராக இருப்பதாக செய்தி வந்தது. அவர்கள் மதீனாவிற்கு வரும் முன்பு அவர்களின் எல்லைக்கே சென்று சண்டையிட வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் விரும்பினார்கள்.

எனவே முஸ்லீம்களை போருக்கும் தயாராகும் படி உத்தரவிட்டார்கள். அந்த நேரம் மிகக்கடுமையான வெயில் காலமாக இருந்தது. உணவுப் பொருள் பற்றாக்குறையும் இருந்தது. வாகனங்களும் போதுமான அளவு இல்லை.

செல்ல வேண்டிய தொலைவோ மிகவும் அதிகம் பாதைகளும் மிக கரடுமுரடான பாதைகள், எதிரிகளோ மிகப் பெரும் பலம் வாய்ந்தவர்கள்.

ஆனாலும் ஸஹாபாக்கள் சுமார் 30,000 பேர் போருக்கு தயாரானார்கள். அது பேரிட்சம் பழம் அறுவடை செய்ய வேண்டிய காலம். போருக்குச் சென்று விட்டால் அறுவடையில் பாதிப்பு ஏற்படும். ஆனால் அதையும் பொருட்படுத்தாமல் ஸஹாபாக்கள் போருக்குப் புறப்பட்டார்கள்.

வசதி படைத்தவர்கள் தங்களால் முடிந்த அளவு போர் நிதி வழங்கினார்கள். ஒரு சில முனாபிக்குகள் மட்டும் நபி (ஸல்) அவர்களிடம் வந்து சில சாக்கு போக்குகளை சொல்லி போருக்கு வராமல் ஒதுங்கிக் கொண்டார்கள்.

நபி (ஸல்) அவர்கள் படைக்கு தலைமை தாங்கி தபூக் என்ற இடத்தை நோக்கி கிளம்பினார்கள். செல்லும் வழியில்

வாகனப் பற்றாக்குறையால் ஒரு ஒட்டகத்தில் முறை வைத்து 18 நபர்கள் பயணம் செய்தார்கள்.

உணவுப் பற்றாக்குறையால் மரத்தின் இலைகளையும், தழைகளையும் சாப்பிட்டார்கள். இவ்வாறாக நாயகம் (ஸல்) அவர்கள் ரோமர்களின் எல்லையாகிய தபூக் வரை சென்று அங்கு படைகளை அணிவகுக்கச் செய்தார்கள்.

முஸ்லிம்கள் துணிச்சலாக தங்கள் எல்லை வரை வந்ததை அறிந்த ரோமர்கள் பயந்து போனார்கள். முஸ்லிம்களை நேருக்கு நேர் வந்து எதிர்ப்பதற்கு அவர்களுக்குத் துணிவு வரவில்லை.

எனவே படைகளை திருப்பிக் கொண்டு ஓடி மறைந் தார்கள். நபி (ஸல்) அவர்கள் எல்லைத் தாண்டி அவர்கள் நாட்டுக்குள் செல்ல விரும்பவில்லை. இவ்வாறு அல்லாஹுத் தஆலா போர் செய்யாமலேயே முஸ்லிம் களுக்கு வெற்றியைக் கொடுத்தான்.

தபூக்கிற்கு அருகில் இருந்த பல சிறிய ஊர்களும், கூட்டங்களும் நபி (ஸல்) அவர்களிடம் வந்து ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். 20 நாட்கள் நபி (ஸல்) அவர்கள் அங்கேயே தங்கியிருந்தார்கள்.

பின்னர் மதீனாவிற்கு வந்தார்கள். இதுவே நாயகம் (ஸல்) அவர்கள் கலந்து கொண்ட இறுதிப் போராகும்.

இந்தப் போரினால் இஸ்லாத்தின் புகழ் உலகெங்கும் பரவியது. இஸ்லாத்தை நசுக்கிவிடலாம் என்று கற்பனை செய்த பல நாட்டு எதிரிகளின் கனவுகளை அல்லாஹ் தகர்த்து விட்டான்.

சுற்றிலும் வாழ்ந்த பாரசீக ரோமபுரி மன்னர்களும், முஸ்லிம்களுக்கு தொந்தரவு கொடுப்பதை பயந்தார்கள். அரபுநாட்டில் வாழ்ந்த சிறுசிறு கூட்டங்களெல்லாம் இஸ்லாத்தில் இணையத் துவங்கினார்கள்.

***ஹஜ்ஜு கடமையாகுதல்:-***

*ஹிஜ்ரி 9 துல்ஹஜ் மாதம் நபி (ஸல்) அவர்கள்* **ஹள்ரத் அபூபக்கர்** *(ரலி) அவர்கள் தலைமையில் ஸஹாபாக்களை ஹஜ்ஜுக்கு அனுப்பி வைத்தார்கள். ஹிஜ்ரி 9ம் வருடம் தான் ஜகாத்தும் கடமையானது.*

## 5. ஹஜ்ஜத்துல் விதா

*(நபி (ஸல்) அவர்களின் இறுதி ஹஜ் பயணம்)*

*ஹிஜ்ரி 10 ஆம் ஆண்டு துல் கஃதா மாதம் இறுதியில் மதீனாவிலிருந்து ஹஜ்ஜுக்கு கிளம்பினார்கள்.* **துல் ஹுலைபா** *என்ற இடத்தில் குளித்து இஹ்ராம் அணிந்துக் கொண்டு புறப்பட்டாரகள்.* **(படம் - 53)**

*துல்ஹஜ் பிறை 4ல் மக்கா சென்று கஃபாவை தவாப் செய்தார்கள். அதன் பின்பு ஸஃபா, மர்வாவிலே ஸயீ செய்தார்கள். உம்ராவை முடித்துக் கொண்ட பின் அங்கேயே தங்கியிருந்தார்கள்.*

*பிறை 8ல் மினாவுக்கு சென்றார்கள். பிறை 9ல் பஜ்ருக்கு பின்பு அரபாவுக்கு சென்றார்கள். அரபா மைதானத்திலே கூடியிருந்த 1, 24,000 ஸஹாபாக்களுக்கு மத்தியில் நபி (ஸல்) அவர்கள் உரையாற்றினார்கள்.* **(படம் - 57, 58)**

*தங்களுடைய கஸ்வா என்ற ஒட்டகத்தின் மேல் அமர்ந்து உரை நிகழ்த்தினார்கள். ஹஜ்ஜத்துல் விதாவுடைய இந்த உரை மிக முக்கியமான உரையாகும். மிக அவசியமான பல விஷயங்களை நபி (ஸல்) அவர்கள் தெரிவித்தார்கள்.*

*“யாரும், யாருக்கும் அநீதி இழைக்கக்கூடாது. ஒவ்வொருவரின் உயிரையும், பொருளையும், மானத்தையும் எல்லோரும் மதிக்க வேண்டும்.”*

*“அறியாமைக் காலத்தின் மூடப் பழக்கங்களை என்*

காலுக்குக் கீழ் போட்டு புதைத்து விட்டேன். அறியாமைக் காலத்தில் நடந்த கொலைகளுக்கு இனிமேல் யாரும் பழிவாங்கக்கூடாது.”

“அறியாமைக்கால வட்டிகளை நான் தள்ளுபடி செய்து விட்டேன்.”

“நீங்கள் அல்லாஹ்வுடைய வேதத்தை பற்றிப் பிடித்திருக்கும் காலமெல்லாம் வழித்தவற மாட்டீர்கள்.”

“பெண்கள் விஷயத்திலே அல்லாஹ்வை அஞ்சிக் கொள் -ளுங்கள். அவர்களின் கடமைகளை நிறைவேற்றுங்கள்.”

“தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் முதலிய கடமை களை பரிபூரணமாக நிறைவேற்றுங்கள்.”

“உங்கள் தலைவருக்கு கட்டுப்படுங்கள். நிறத்தால் உயர்வு, தாழ்வு கிடையாது. வெள்ளையரோ, கருப்பரோ இறையச்சத்தைக் கொண்டு தான் அவர் கண்ணியம் பெறுவார்” என்பது போன்ற உபதேசங்களை செய்து முடித்து விட்டு “மக்களே! மறுமையில் அல்லாஹ் உங்களிடம் என்னைப் பற்றி விசாரித்தால் நீங்கள் என்ன சொல்வீர்கள்? நான் அல்லாஹ்வின் செய்தியை உங்களிடம் முழுமையாக எத்தி வைத்தேனோ?” என்று கேட்டார்கள்.

கூடியிருந்த ஸஹாபாபக்கள் அனைவரும் “நீங்கள் பரிபூரணமாக எடுத்துரைத்தீர்கள் என்று நாங்கள் சாட்சி கூறுவோம்” என்று கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் தங்கள் விரலை வானத்தை நோக்கி உயர்த்தி “யாஅல்லாஹ் இதற்கு நீயே சாட்சி” என்று சொன் -னார்கள். அப்போது அல்லாஹுதஆலா இன்றைய தினம் உங்களுக்கு மார்க்கத்தை முழுமையாக ஆக்கிவிட்டேன் என்ற வசனத்தை இறக்கி வைத்தான். அதன் பின்பு அன்றிரவு **முஜ்தலிபா**வில் தங்கிவிட்டு காலையில் **மினா**வுக்கு வந்தார்கள். **(படம் - 55, 56)**

பின்னர் அங்கே ஷைத்தானுக்கு கல்லெறிந்து விட்டு மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். பின்பு 100 ஒட்ட -கங்களை அல்லாஹ்வுக்காக குர்பானி கொடுத்தார்கள்.

அதில் 63 ஒட்டகங்களை தங்கள் புனித கைகளால் அறுத்தார்கள். மீதமுள்ள ஒட்டகங்களை அலி (ரலி) அவர்களை அறுக்கச் சொன்னார்கள்.

இது தனது வயது 63 தான் என்று குறிப்பிடுவது போன்று இருந்தது. அதன்பின் மக்கா சென்று தவாப் செய்து மீண்டும் மினாவுக்கு வந்து 2 நாட்கள் தங்கினார்கள். பின்னர் மக்கா சென்று "**தவாபுல்விதா**" வை முடித்துக் கொண்டு மதீனா -விற்கு திரும்பி விட்டார்கள்.

## 6. நபியவர்கள் உலகைப் பிரிவது

நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரி 10ஆம் ஆண்டு ஹஜ்ஜை முடித்து வந்த பின்பு ஹிஜ்ரி 11 ஸஃபர் மாத தொடக்கத்தில் **உஹது** மலைக்கு சென்று அங்கு அடக்கமாகியுள்ள ஷுஹதாக்களுக்கு துஆச் செய்தார்கள்.

பின்பு பள்ளிவாசலுக்கு வந்து மக்களுக்கு உபதேசம் செய்தார்கள்.

என் அருமை மக்களே! நான் உங்களுக்கு முன்னால் செல் -கிறேன். நான் உங்களுக்கு சாட்சியாளனாக இருக்கிறேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக இதோ என்னுடைய நீர்த் தடாகத்தை (ஹவ்ள்) பார்க்கிறேன். எனக்கு பூமியிலுள்ள பொக்கிஷங்களின் சாவிகள் கொடுக்கப்பட்டன. அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனக்குப் பின் நீங்கள் இணைவைப்பவர்களாக மாறிவிடுவீர்களோ என்று நான் அஞ்சவில்லை. இந்த உலகத்திற்காக நீங்கள் சண்டையிட்டு கொள்வீர்களோ என்று தான் நான் அஞ்சுகிறேன் என்று பேசினார்கள்.

ஸஃபர் மாதக் கடைசியிலே நபி (ஸல்) அவர்களுக்கு

கடுமையான தலைவலியும், காய்ச்சலும் ஏற்பட்டது. அதே நிலையில் 11 நாட்கள் மக்களுக்கு தொழுக வைத்தார்கள்.

தங்கள் மற்ற மனைவியரிடம் அனுமதி பெற்றுக் கொண்டு அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் வீட்டில் தங்கி -னார்கள். அதன் பின்பு கைத் தாங்கலாக பள்ளிவாசலுக்கு வந்து மக்களுக்கு உபதேசம் செய்தார்கள்.

“மனிதர்களே! தொழுகையை கடைபிடியுங்கள். உங்கள் அடிமைகளிடத்திலே அன்போடு நடந்து கொள்ளுங்கள்” என்று கூறினார்கள்.

அதன்பின் “நான் யாருக்கும் கடன்தர வேண்டியிருந் தால் அதைப் பெற்றுக் கொள்ளுங்கள். நான் யாரையாவது திட்டியிருந்தால், அடித்திருந்தால் அதற்காக என்னை பழிவாங்கிக் கொள்ளுங்கள்.” என்று கூறினார்கள்.

அப்போது ஒருவர் யாரஸுலுல்லாஹ் எனக்கு நீங்கள் மூன்று திர்ஹம் கடன் தரவேண்டும் என்று கூறினார். உடனே அதை கொடுக்கச் செய்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மரணிப்பதற்கு முன்பு கடைசி மூன்று நாட்கள் அவர்களால் தொழ வைக்கமுடியவில்லை. எனவே தங்கள் தோழர் அபூபக்கர் (ரலி) அவர்களைத் தொழ வைக்கும்படி கூறினார்கள்.

“உங்களில் எவரும் அல்லாஹ்வின் மீது நல்ல எண்ணம் கொண்டவராகவே தவிர மரணிக்க வேண்டாம் என்று அறிவுரை கூறினார்கள்.

மரணமாகுவதற்கு ஒருநாள் முன்பு தங்களிடமிருந்த அடிமைகளை உரிமை விட்டார்கள். மேலும் தங்களிடமி ருந்த 6 அல்லது 7 தங்கக் காசுகளை தர்மம் செய்து விட்டார்கள்.

மேலும் தாங்கள் வைத்திருந்த ஆயுதங்களையும், முஸ்லிம்களுக்கு அன்பளிப்பு செய்து விட்டார்கள்.

ஹிஜ்ரி 11 ரபியுல் அவ்வல் பிறை 12 திங்கள் கிழமை காலை நபி (ஸல்) அவர்கள் அறையின் திரையை நீக்கி மக்களைப் பார்த்தார்கள். மக்கள் அணிஅணியாக தொழுகைக்கு நிற்பதைப் பார்த்து மகிழ்ச்சியாக சிரித்தார்கள்.

அதன் பின்னர் அருமை மகள் பாத்திமா (ரலி) அவர்களை அழைத்து அவர்களிடம் இரகசியமாக பேசினார்கள். அதைக் கேட்டு பாத்திமா (ரலி) அவர்கள் அழுதார்கள்.

மீண்டும் வேறொரு செய்தியை பேசினார்கள். உடனே பாத்திமா (ரலி) அவர்கள் சிரித்தார்கள்.

அதைப் பற்றி பிற்காலத்தில் பாத்திமா (ரலி) அவர்கள் கூறிய போது முதலில் தான் அல்லாஹ்விடம் செல்லப் போவதாக நபி (ஸல்) கூறினார்கள். நான் அழுதேன். அடுத்த -தாக நமது குடும்பத்தார்களில் நான் தான் முதலில் நபியை சந்திக்க வருவேன் என்று கூறினார்கள். நான் சிரித்தேன் என்று பாத்திமா (ரலி) கூறினார்கள்.

தங்கள் மனைவிமார்களை அழைத்து அவர்களுக்கு அறிவுரை கூறினார்கள். பேரர்கள் **ஹசன்** (ரலி), **ஹுசைன்** (ரலி) அவர்களை அழைத்து முத்தம் கொடுத்தார்கள்.

மிஸ்வாக் குச்சியை வாங்கி பல் துலக்கினார்கள். கைகளை தண்ணீரில் நனைத்து முகத்தில் தடவிக் கொண்டார்கள். நபி (ஸல்) அவர்களுடைய தலை அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் மடியில் இருந்தது.

பெருமானார் (ஸல்) அவர்களின் இறுதி நேரம் நெருங்கியது. "**லாயிலாஹ இல்லல்லாஹ்** வணக்கத்திற் குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. நீ அருள் புரிந்த நபிமார்கள், சித்தீகீன்கள், ஷுஹதாக்கள், ஸாலிஹீன்களோடு என்னை சேர்ப்பாயாக! யா அல்லாஹ்

என்னை மன்னிப்பாயாக! என் மீது கருணை காட்டுவாயாக"

"அல்லாஹும்ம **அர்ரபீகுல்அஃலா!** யா அல்லாஹ்! என் உயர்ந்த தோழனே!" என்று இறுதியாக சொல்லி கண்களை மூடிக் கொண்டார்கள். அவர்களின் வயது 63 வருடம் 4 நாட்களாகும்.

நபி (ஸல்) அவர்கள் தங்கியிருந்த ஆயிஷா (ரலி) அவர்களின் வீட்டில் தான் நபி (ஸல்) அவர்கள் வஃபாத் ஆனார்கள். வஃபாத் ஆன இடத்திலேயே அடக்கம் செய்யப் பட்டார்கள்.

மக்கள் அனைவரும் சேர்ந்து ஹள்ரத் **அபூபக்கர்சித்தீக்** (ரலி) அவர்களை கலீஃபாவாக நபியவர்களின் பிரதிநிதியாக நியமித்தார்கள்.

# பகுதி – 8

# குடும்பமும், பண்புகளும்

## 1. நபி (ஸல்) அவர்களின் குடும்பம்

நபி (ஸல்) அவர்கள் அக்கால அரசர்களின் வழக்கப்படி மக்களுக்கு மத்தியில் அன்பை ஏற்படுத்துவதற்காகவும், மார்க்க சட்டங்களை கற்று தருவதற்காகவும் 11 திருமணங்கள் செய்திருந்தார்கள். 2 அடிமைப் பெண்களும் இருந்தார்கள்.

அவர்களின் பெயர் விபரங்கள்:

1. கதீஜா பின்த் குவைலிது (ரலி)
2. ஸவ்தா பின்த் ஜம்ஆ (ரலி)
3. ஆயிஷா பின்த் அபூபக்ர் (ரலி)
4. ஹப்ஸா பின்த் உமர் (ரலி)
5. ஜைனப் பின்த் குஜைமா (ரலி)
6. உம்மு ஸலமா ஹிந்த் பின்த் அபூ உமையா (ரலி)
7. ஜைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி)
8. ஜுவைரிய்யா பின்த் அல்ஹாரிஸ் (ரலி)

*9. உம்மு ஹபீபா பின்த் அபூ ஸுஃப்யான் (ரலி)*

*10. ஸஃபிய்யா பின்த் ஹை (ரலி)*

*11. மைமூனா பின்த் ஹாரிஸ் (ரலி)*

இரண்டு அடிமைப் பெண்கள்:

*1. மாரியத்துல் கிப்தியா (ரலி)*

*2. ரைஹானா பின்த் ஜைது (ரலி)*

நபி (ஸல்) அவர்களுடைய பிள்ளைகள்:-

நபி (ஸல்) அவர்களுக்கு கதீஜா (ரலி) அவர்களின் மூலம் 6 பிள்ளைகள் பிறந்தார்கள்.

*1. காசிம் (ரலி)*

*2. ஜைனப் (ரலி)*

*3. ருகைய்யா (ரலி)*

*4. உம்மு குல்சூம் (ரலி)*

*5. பாத்திமா (ரலி)*

*6. அப்துல்லாஹ் (ரலி)*

அப்துல்லாஹ் அவர்களுக்கு தய்யிப், தாஹிர் என்று இரண்டு பட்டப்பெயர்கள் இருந்தது.

காசிம் (ரலி)யும், அப்துல்லாஹ் (ரலி)யும் குழந்தை பருவத்திலேயே வஃபாத் ஆகிவிட்டார்கள்.

மேலும் நபி (ஸல்) அவர்களுக்கு அடிமைப் பெண்ணாகிய மாரியத்துல் கிப்திய்யா (ரலி) அவர்களின் மூலம் இப்ராஹீம் என்ற குழந்தை பிறந்தது.

அவர்களும் குழந்தை பருவத்திலேயே வஃபாத் ஆகிவிட்டார்கள்.

# உ. நபி (ஸல்) அவர்களின் உடல் அமைப்பும், தோற்றமும்

*1. நபி (ஸல்) அவர்கள் நடுத்தரமான உயரம் உடையவர்கள், குட்டையும் இல்லை, நெட்டையுமில்லை.*

*2. நடுத்தரமான உடல் கனம் உடையவர்கள் பெருத்த உடம்போ, மிகுந்த ஒல்லியோ இல்லை.*

*3. சிவந்த வெண்மை நிறமுடையவர்கள்*

*4. நன்கு கருத்த கருவிழியும், நீண்ட இமை முடியும் பெற்றவர்கள்.*

*5. கண்ணின் கீழ் புறத்தில் சுர்மா இட்டது போன்று அழகாக இருக்கும்.*

*6. நெற்றி விசாலமாகவும், பிரகாசமான முகம் உடையவர்களாகவும் இருப்பார்கள்.*

*7. அடர்ந்த தாடி உடையவர்களாக இருந்தார்கள்.*

*8. மார்பும், வயிறும் சமமாக இருக்கும்.*

*9. அவர்களின் கைகளும், கால்களும், விரல்களும் சற்று நீளமாக இருக்கும்.*

*10. தலைமுடிகள் காதுவரை நீண்டிருந்தது.*

*11. அவர்களின் முதுகில் இரு புஜங்களுக்கு மத்தியில் புறாவின் முட்டையைப் போல் சிறியதாக உடல் நிறத்திலேயே நபித்துவ முத்திரையிருந்தது.*

*12. மிகவும் பேரழகு கொண்டவர்களாக இருந்தார்கள்.*

*13. அவர்கள் உலகை பிரியும் போது தாடியிலும், தலையிலும் சேர்த்து 20ஐ விட குறைவான வெள்ளை முடிகளே இருந்தன.*

*14. தங்கள் தலை முடிகளை நடுவில் வகுடு எடுத்து சீவுவார்கள்.*

*15. அவர்களின் புனித மேனியிலிருந்து எப்போதும் நறுமணம் வீசிக்கொண்டே இருக்கும்.*

*16. அவர்கள் ஒரு தெருவில் நடந்து சென்றால் கஸ்தூரியை விட உயர்ந்த நறுமணம் தெருவெங்கும்*

மணக்கும்.

17. பின்னால் வரக்கூடியவர்கள் இந்த வழியே நபி (ஸல்) அவர்கள் சென்றுள்ளார்கள் என்று அறிந்து கொள்வார்கள்.

## 3. நபியவர்களின் நற்பண்புகள்

1. நபியவர்கள் உயர்ந்த நற்குணமுடையவர்களாக இருந்தார்கள்.

2. யாரையும் குறைவாக மதிக்க மாட்டார்கள். எல்லோரையும் கண்ணியப்படுத்துவார்கள்.

3. மிக அதிகம் வாரி வழங்கும் ஈகை குணமிக்கவர்கள்

4. உண்மையே பேசுவார்கள்.

5. மிகவும் துணிச்சலும், வீரமும் மிக்கவர்கள்.

6. தெள்ளத் தெளிவாக இலக்கிய நயத்தோடு பேசுவார்கள். பெரிய கருத்துகளை சுருக்கமான வார்த்தை களில் தெரிவிப்பார்கள்.

7. பொறுமையும், சகிப்புத்தன்மையும் பெற்றிருந்தார்கள்.

8. தண்டிக்க வாய்ப்பிருந்தும் மன்னித்து விடுவார்கள்.

9. மிகவும் வெட்கமும், கூச்சமும் உடையவர்களாக இருந்தார்கள்.

10. பார்வையை கீழ் நோக்கியே வைத்திருப்பார்கள்.

11. அறுவருக்கத்தக்க பேச்சுகளை ஒரு போதும் பேசியதில்லை.

12. அறுவருக்கத்தக்க செயல்களை ஒரு போதும் செய்ததில்லை.

13. தன் மனைவியர் அல்லாத எந்த பெண்களையும் விரல்களால் கூட தொட்டதில்லை.

14. அவர்கள் நண்பர்கள் மட்டுமின்றி எதிரிகளும் கூட அவர்களை அல்அமீன்- நம்பிக்கையாளர், அஸ்ஸாதிக்- உண்மையாளர் என்று அழைப்பார்கள்.

15. எல்லோரையும் விட அதிக பணிவுள்ளவர்களாக

இருந்தார்கள்.

*16.* ஒரு போதும் பெருமையடிக்க மாட்டார்கள்.

*17.* நலிந்தோர்களையும், உடல் நலமில்லாதவர்களையும் நலம் விசாரிப்பார்கள்.

*18.* ஏழைகளோடு சேர்ந்திருப்பார்கள்.

*19.* வீட்டிற்கு வந்தால் வீட்டு வேலைகளில் அவர்களும் பங்கெடுப்பார்கள்.

*20.* தங்களது காலணிகளையும், தங்களது ஆடைகளையும் தாங்களே தைத்து கொள்வார்கள். ஆடைகளை தாங்களே சுத்தம் செய்து கொள்வார்கள்.

*21.* உறவினர்களை ஆதரிப்பார்கள்.

*22.* செய்த வாக்குறுதிகளை அவசியம் நிறை -வேற்றுவார்கள்.

*23.* மக்களின் மீது மிக்க அன்பு, பாசம், கருணை கொண்டவர்களாக இருந்தார்கள்.

*24.* அவர்களிடம் எந்த கெட்ட குணமும் இருந்ததில்லை.

*25.* யாரையும் ஏசவும், சபிக்கவும் மாட்டார்கள்.

*26.* தங்களுக்கு பணிவிடை செய்தவர்களுக்கு தாங்களும் பணிவிடை செய்வார்கள்.

*27.* தங்கள் பணியாளர்களை "சீ" என்று கூட சொன்னதில்லை.

*28.* தேவையின்றி பேசமாட்டார்கள்.

*29.* மிகுதமாக அமைதியாக இருப்பார்கள்.

*30.* எப்போதும் சிந்தனை செய்து கொண்டே இருப்பார்கள்.

*31.* தனக்காக யாரின் மீதும் கோபப்படமாட்டார்கள். பழிவாங்கமாட்டார்கள். ஆனால் அல்லாஹ்விற்காக கோபப்படுவார்கள். அவன் சட்டங்களுக்கு மாற்றம் செய்தால் நிச்சயம் தண்டனை கொடுப்பார்கள்.

*32.* ஒரு சமூகத்தில் சிறப்புக்குரியவர்களை தாங்களும் கண்ணியப்படுத்துவார்கள். அவரையே நிர்வாகியாக நியமிப்பார்கள்.

*33. காணாத தங்களின் தோழர்களை பற்றி அக்கரையாக விசாரிப்பார்கள்.*

*34. என்னேரமும் அல்லாஹ்வை நினைவு கூறுவார்கள்.*

*35. ஒவ்வொரு நண்பரிடத்திலும் அன்போடு உரையாடுவார்கள்.*

*36. தானே நபியவர்களுக்கு நெருக்கமானவர் என்று ஒவ்வொருவரும் எண்ணும் அளவிற்கு நடந்து கொள்வார்கள்.*

*37. சிறிவர்களிடத்தில் அன்பும், இரக்கமும் காட்டுவார்கள்.*

*38. தேவையுடையவர்களுக்கு உதவி செய்வார்கள்.*

*39. எப்போதும் மலர்ந்த முகத்தோடு காட்சி அளிப்பார்கள்.*

*40. முகஸ்துதி செய்வது, பிறரைப் பழிப்பது, குறை கூறுவது போன்றவற்றை செய்யமாட்டார்கள்.*

*41. நபியவர்களைப் பார்த்து அல்லாஹ்வே குர்ஆனில் “நீங்கள் மிக உயர்ந்த நற்குணத்தில் இருக்கின்றீர்கள்” என்று கூறுகிறான்.*

## 4. நபியவர்களின் அற்புதங்கள்

*நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் என்பதற்கு அடையாளமாக அவர்களில் அல்லாஹ் நிறைய முஃஜிஸாக்களை நிகழ்த்தி காட்டினான். முஃஜிஸா என்றால் வழமைக்கு மாற்றமான, இன்னும் பிறரால் செய்ய முடியாத அற்புதமான செயலாகும்.*

*எல்லா நபிமார்களும் முஃஜிஸாக்களை காட்டினார்கள்.*

*ஸாலிஹ் (அலை) மலையிலிருந்து ஒட்டகத்தை வரவழைத்தார்கள்.*

*மூஸா (அலை) தடியை பாம்பாக மாற்றினார்கள்.*

*ஈஸா (அலை) இறந்தவர்களை உயிர்ப்பித்தார்கள்.*

*தாவூத் (அலை) அவர்கள் இரும்பை மெழுகு போல்*

வளைத்தார்கள்.

அலலாஹ் நபிமார்களில் இவ்வாறு அற்புதங்களை வெளியாக்குவதின் காரணம்

அதைப் பார்த்து மக்கள் "இவர் உண்மையான நபி" என்று விளங்கி கொள்வதற்காக வேண்டியே ஆகும்.

சிலர் அதைப் பார்த்து நபிமார்களை ஏற்றுக் கொண்டார் கள். இன்னும் சிலரோ இது வெறும் சூனியம், ஜோசியம், ஏமாற்றுதல் என்று கூறி விலகிச் சென்றார்கள். ஒவ்வொரு நபியும் சில சில அற்புதங்களைக் காட்டினார் கள். ஆனால் நபி (ஸல்) அவர்கள் ஆயிரக்கணக்கான அற்புதங்களைக் காட்டினார்கள். இவை அனைத்தும் ஆதாரப் பூர்வமாக ஹதீஸ் கிதாபுகளில் இருக்கின்றன. சுருக்கமாக சிலவற்றை மட்டும் நாம் பார்ப்போம்.

**1.அல்குர்ஆன்:**

குர்ஆன் மிகப் பெரிய அற்புதம் ஆகும். இதைப் போன்று ஒரு குர்ஆனையோ அல்லது ஒரு சூராவையோ அல்லது ஒரு ஆயத்தையோ கொண்டு வரும்படி அல்லாஹுத்தஆலா சவால் விட்டான். ஆனால் இன்று வரை யாரும் கொண்டு வரவில்லை.

இந்தப் புனித குர்ஆனில் ஒரு எழுத்தையோ, ஒரு வார்த்தையையோ இதுவரை யாரும் மாற்ற முடியவில்லை.

இவ்வாறு அல்லாஹுத்தஆலா குர்ஆனை பாதுகாத்து வருகிறான். இது மிகப் பெரிய அற்புதமாகும்.

**2.நபி(ஸல்)வானத்தில்நிகழ்த்தியஅற்புதங்கள்:**

1. மறைந்த சூரியனை திரும்பக் கொண்டு வந்தார்கள்.

2. நிலாவை இரண்டாகப் பிளந்து மீண்டும் சேர்த்தார்கள்.

3. மழையைக் கொண்டு வந்தார்கள்.

4. கடுமையான மழை பெய்த நேரத்தில் மேகங்களை

கலைந்து போகச் செய்தார்கள்.

**3. பூமியில் பெருமானார் (ஸல்) அவர்கள் நிகழ்த்திய அற்புதங்கள்:**

1. பெருமானார் அழைத்த உடன் மரங்கள் ஓடி வந்தன.

2. பெருமானார் புனித விரல்களிலிருந்து ஒரு படைக்கு தேவையான அளவு தண்ணீர் வந்தது.

3. ஓரிருவர் சாப்பிடும் உணவை பலநூறு பேர் சாப்பிடச் செய்தார்கள்.

4. ஒட்டகம் போன்ற பல மிருகங்கள் நபி (ஸல்) அவர்களிடத்தில் பேசியிருக்கின்றன.

5. ஜின் இனத்தாருடன் பேசினார்கள்.

6. பெருமானாருடைய கரம் பட்டதால் பலருடைய வியாதிகள் நீங்கியிருக்கின்றன.

**4.நபிகளாரின்உடல்அற்புதங்கள்:**

1. நபி (ஸல்) அவர்கள் நடந்தால் மேகங்கள் குடையிடும்.

2. அவர்களின் புனித உடலுக்கு நிழல் விழுந்ததே இல்லை.

3. அவர்கள் மண்ணில் நடந்தால் கால் தடம் பதிவதில்லை.

4. அவர்கள் கொட்டாவி, குறட்டை விட்டதே இல்லை.

5. அவர்களின் புனிதமேனியை ஈ, எறும்பு தொட்டதே இல்லை.

6. பெருமானார் புனித மேனியில் எப்போதும் கஸ்தூரி மணம் வீசும்.

**5.மறைவானசெய்திகளைஅறிவிக்குதல்:**

1. நபி (ஸல்) அவர்கள் நடந்து விட்ட, நடக்கப்போகிற எத்தனையோ மறைவான செய்திகளை அறிவித்தார்கள்.

*2. இஸ்லாமியர்கள் பாரசீக, ரோமாபுரியை கைப்பற்றுவார்கள் என்று அறிவித்தார்கள்.*

*3. உமர் (ரலி), உஸ்மான் (ரலி), அலி (ரலி) ஆகியோர் கொலை செய்யப்படுவார்கள் என்று அறிவித்தார்கள்.*

*4. கிஸ்தன்தூனியா என்ற நாடு முஸ்லிம்களுக்கு வரும் என்று அறிவித்தார்கள்.*

*இவை அனைத்தும் நடந்தன.*

*5. மறுமை நாளின் அடையாளங்களைப் பற்றி அறிவித்தார்கள். இவை அனைத்தும் நடந்து வருகின்றன.*

***6.மிஃராஜ் பயணம்:***

*1. நபி (ஸல்) அவர்கள் ஒரே இரவில் மக்காவிலிருந்து பைத்துல் முகத்தஸ் சென்று அங்கிருந்து 7 வானங்களை கடந்து அல்லாஹ்வுடைய அர்ஷிற்கு சென்று அல்லாஹ் -விடம் பேசினார்கள்.*

*2. அனைத்து நபிமார்களையும் கண்டு பேசினார்கள்.*

*3. சுவர்க்க, நரகத்தை கண்டு வந்தார்கள்.*

## 5. நபியவர்களின் துணைவியர்கள் விபரம்

| பெயர்கள் | பிறப்பு | வபாத் | நபியுடன் திருமணம் நடந்த வருடம் | நபியுடன் வாழ்ந்த வருடங்கள் | திருமணம் நடந்த வயது | நபியின் வபாத்தில் வயது | மரணமான வயது |
|---|---|---|---|---|---|---|---|
| கதீஜா பின்து குவைலித் (ரலி) | ஹிஜ்ரத்திற்கு முன் 68 | ஹிஜ்ரத்திற்கு முன் 3 | ஹி. மு 28 | 25 | 40 | முன்பே வபாதாகி விட்டார்கள் | 65 |
| சௌதா பின்து ஜம்ஆ (ரலி) | தெரியவில்லை | ஹிஜ்ரி 54 | ஹி. மு 3 | 14 | தெரியவில்லை | தெரியவில்லை | தெரியவில்லை |
| ஆயிஷா பின்து அபீபக்கர் (ரலி) | ஹி.மு 8 | ஹி 58 | ஹிஜ்ரி 2ல் வீடு கூடினார்கள் | 9 | 9 | 18 | 65 |
| ஹப்ஸா பின்து உமர் (ரலி) | ஹி.மு 18 | ஹி 45 | ஹி 3 | 8 | 21 | 29 | 63 |
| ஜைனப் பின்து குஜைமா (ரலி) | ஹி.மு 26 | ஹி 4 | ஹி 3 | 8 மாதங்கள் | 29 | முன்பே வபாதாகி விட்டார்கள் | 30 |
| உம்மு ஸல்மா பின்து அபீ உமைய்யா (ரலி) | ஹி.மு 24 | ஹி 61 | ஹி 4 | 7 | 28 | 35 | 75 |
| ஜைனப் பின்து ஜஹ்ஷ் (ரலி) | ஹி.மு 32 | ஹி 21 | ஹி 5 | 6 | 37 | 43 | 53 |
| ஜுவைரிய்யா பின்து ஹாரிஸ் (ரலி) | ஹி.மு 14 | ஹி 56 | ஹி 5 | 6 | 19 | 25 | 70 |
| ஷபிய்யா பின்து ஹுய் (ரலி) | ஹி.மு 9 | ஹி 50 | ஹி 7 | 4 | 16 | 20 | 59 |
| உம்மு ஹபீபா பின்து அபீசுப்யான் (ரலி) | ஹி.மு 25 | ஹி 44 | ஹி 7 | 4 | 32 | 36 | 69 |
| மைமூனா பின்து ஹாரிஸ் (ரலி) | ஹி.மு 29 | ஹி 51 | ஹி 7 | 4 | 36 | 40 | 80 |

## 6. நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை சுருக்கம்

| வயது | நிகழ்வுகள் |
|---|---|
| 1 | 1. அப்ரஹாவின் யானைப் படை (கி.பி 571)<br>2. நபி (ஸல்) அவர்கள் தாய் வயிற்றில் 2மாதக் கருவாக இருந்த போது தந்தை அப்துல்லாஹ் மரணம்<br>3. நபி (ஸல்) பிறப்பு 20-4- 571 ரபிவுல் அவ்வல் பிறை 12<br>4. ஹலீமா வீட்டிற்கு நபி (ஸல்) செல்லுதல் |
| 4 | 1. நபி (ஸல்) புனித இதயம் பிளக்கப்பட்டு மலக்குகளால் கழுவப்பட்டது.<br>2. ஹலீமா வீட்டிலிருந்து மக்காவுக்கு திரும்புதல் |
| 6 | 1. தாயுடன் மதீனா பயணம்<br>2. மதீனாவிலிருந்து திரும்பும் வழியில் தாயார் ஆமினா வின் மரணம்<br>3. பாட்டனார் அப்துல் முத்தலிபிடம் வளர்தல். |
| 8 | 1. பாட்டனார் அப்துல் முத்தலிப் மரணம்<br>2. சிறிய தந்தை அபூதாலிபிடம் வளர்தல். |
| 12 | 1. சிறிய தந்தையுடன் ஷாம் பயணம்<br>2. துறவி புஹைராவின் முன்னறிவிப்பு |
| 20 | 1. ஹர்புல் பிஜார் போரில் பங்கேற்றது.<br>2. ஹில்புல் புளூல் ஒப்பந்தத்தில் கலந்து கொண்டது. |
| 25 | 1. கதீஜா (ரலி) வுடைய வியாபாரப் பொருட்களுடன் ஷாம் நாட்டிற்கு பயணம் (கி.பி – 595)<br>2. கதீஜா (ரலி) யுடன் திருமணம் |

**35**

1. கஃபாவை புதுப்பிக்கும் பணி
2. ஹஜருல் அஸ்வதை நபி (ஸல்) எடுத்து வைத்தனர்.

**38**

1. ஹிரா குகையில் இறை தியானம்
2. நுபுவுத்தின் அடையாளங்கள் வெளிப்படுதல், உண்மை கனவுகள், கற்களும், மரங்களும் சலாம் கூறுதல்.

**40**

1. நுபுவத்தை அறிவித்தல் -குர்ஆனின் வஹீ ஆரம்பம்- 10-8-610 ரமலான் பிறை 27
2. கதீஜா (ரலி), அபூபக்கர் (ரலி), அலீ (ரலி), ஜைத் (ரலி) இஸ்லாத்தை ஏற்குதல்.

**43**

1. இஸ்லாத்தின் பக்கம் மக்களை பகிரங்கமாக அழைத்தல்.
2. குரைஷிகள் மக்களை துன்புறுத்தல்.

**44**

1. 12 ஆண்கள் 4 பெண்கள் ஹபஷாவிற்கு முதல் ஹிஜ்ரத்
2. 83 ஆண்கள் 18 பெண்கள் ஹபஷாவிற்கு இரண்டாவது ஹிஜ்ரத்

**45**

1. ஹம்ஸா (ரலி) இஸ்லாத்தில் இணைதல்
2. உமர் (ரலி) இஸ்லாத்தில் இணைதல்

**46**

1. குரைஷிகள் முஸ்லிம்களை ஊர் தள்ளி வைத்தல்
2. ஷுஃபே அபூதாலிபில் மூன்று வருடம் தங்குதல்

**49**

1. அபூதாலிப் (ரலி) வபாத்
2. கதீஜா (ரலி) வபாத்
3. சவ்தா (ரலி) யுடன் திருமணம்
4. தாயிஃப் பயணம்
5. மிஃராஜ் பயணம்
6. தொழுகை கடமையாகுதல்

**50**

1. ஆயிஷா (ரலி) யுடன் திருமணம்
2. மதினாவாசிகள் 6 பேர் இஸ்லாத்தை ஏற்குதல்.

**51**

1. மதினாவில் 12 நபர்களுடன் முதல் அகபா ஒப்பந்தம் (கி.பி 621 ஜுன்)
2. முஸ்அப் இப்னு உமைர் (ரலி) மதினா பயணம்.

**52**

1. மதீனாவின் இரண்டாவது அகபா ஒப்பந்தம்
2. ஸஹாபாக்கள் மதீனாவிற்கு ஹிஜ்ரத்து செய்தல்.

**53**
**ஹிஜ்ரி - 1**

1. நபி (ஸல்) மதீனாவிற்கு ஹிஜ்ரத்து புறப்படுதல் (12-9-622 சபர் 27)
2. குபாவைச் சென்றடைதல்
3. மதீனாவில் நுழைதல் ரபிவுல் அவ்வல் 12 (27-9-622)
4. 'மஸ்ஜிதின் னபி' கட்டுதல்

**54**
**ஹிஜ்ரி - 2**

1. ரமலான் நோன்பு கடமையாகுதல்
2. ஜகாத், ஈத் கடமையாகுதல்
3. பத்ருப் போர் (ரமலான் -17, 15-3-624)
4. பாத்திமா (ரலி) அலி (ரலி) திருமணம்

**55**
**ஹிஜ்ரி - 3**

1. உஹதுப் போர்
2. போரில் ஹம்ஜா (ரலி) வீர மரணம்

**56**
**ஹிஜ்ரி - 4**

1. ரஜீஃ நிகழ்வு
2. பிஃரே மவூனா நிகழ்வு
3. பனூ நுளைர் நாடு கடத்தல்.

**57**
**ஹிஜ்ரி - 5**

1. கந்தக் (அகழ் போர்)
2. பனூ குரைலா போர்

**58**
**ஹிஜ்ரி - 6**

1. பனூ முஸ்தலக் போர்
2. ஹுதைபிய்யா உடன்படிக்கை

**59**
**ஹிஜ்ரி - 7**

1. அரசர்களுக்கு கடிதம்
2. கைபர் போர்
3. கழாவுடைய உம்ரா

**60**
**ஹிஜ்ரி - 8**

1. மூத்தாப் போர்
2. மக்கா வெற்றி (கி.பி 630)
3. ஹுனைன் போர், தாயிப் போர்

**61**
**ஹிஜ்ரி - 9**

1. தபூக் போர்
2. அபூபக்கர் (ரலி) தலைமையில் ஹஜ்

**62**
**ஹிஜ்ரி - 10**

1. நபிகளாரின் இறுதி ஹஜ்
2. யமனுக்கு கவர்னரை அனுப்புதல்

**63**
**ஹிஜ்ரி - 11**

1. அபூபக்கர் (ரலி) அவர்களை தொழ வைக்கச் சொல்லுதல்.
2. நபி (ஸல்) உலகை பிரிதல்
3. அபூபக்கர் (ரலி) அவர்கள் கலீஃபாவாகுதல்